யார் பெயர் விக்டோரியா என்பதையுஞ் சேர்த்து **அலெக்சாண்டிரினா விக்டோரியா** என்று அரசியார்க்குப் பெயரிடப்பட்டது.

விக்டோரியா இங்கிலாந்தை அரசாள்வா ரென்பதை எவருமே நினைக்கவேயில்லை, கென்ட் அரசர்க்குத் தமையன்மார் இருவர் இருந்தமையால், அவர்களாவது, அவர்களின் பின் வருவோராவது அரசாள வரக்கூடுமாதலால், அவர்களெல்லாரையுங் கடந்து விக்டோரியாவுக்குப் பட்டங் கிடைக்குமென்று எண்ண இடமில்லாதிருந்தது. ஆயினும், இவர் தந்தையார் மட்டும், தம் அருமைத் திருமகளார் எப்படியாவது இங்கிலாந்திற்கு அரசியாய் வருவாரென்று தம் நண்பர்களிடம் சொல்லி வந்தார். இவர், தம் மனைவியார் கருக்கொண் டிருந்த போது, 'பிறக்குங்குழந்தை இங்கிலாந்திற்கு அரசியானாலும் ஆகலாம்; அது அந்நாட்டிலே பிறக்கவேண்டும்' என்று அவரைப் பவேரியாவி லிருந்து இலண்டன் நகரிற்கு அழைத்து வந்தனர். வந்த சில நாட்களில் பேரறிவும் பேரழகுமிக்க பெண்மகவு பிறந்தது. தந்தையார் கருத்துப்படியே விக்டோரியா பிறந்தமையால், அவர் அவ்வருமைக் குழவியிடத்து வைத்த அன்பிற்கோர் அளவேயில்லை. குழந்தையைக் கண்டு மகிழும் இன்பத்தைத் தவிர வேறொன்றும் அவர் பெற்றோர்க்கு மகிழ்வாய்த் தோன்ற வில்லை. இதனையே 'பெறுமவற்றுள் யாமறிவதில்லை அறிவறிந்த, மக்கட் பேறல்ல பிற' என்று வள்ளுவர் கூறினார்.

## 2. தந்தையாரை இழத்தல்

கென்ட் அரசர்க்குத் தம் அருமைக் குழவியோடு நீண்டகால மிருந்து மகிழும் பேறு கிடைக்கவில்லை.

## முகவுரை

ஒவ்வொரு நாட்டினுடைய முன்னேற்றத்திற்கும், அந்நாட்டு மாதராருடைய முன்னேற்றம் முதற்படியா மென்பது அனைவரும் நன்குணர்ந்ததொன்று. கல்வித் துறை முதலிய பலவகைத் துறைகளிலும் மேனுட்டு மாதரார்கள் பல்லாண்டுகட்கு முன்னரே முன்னுக்கு வந்துவிட்டனர். நமது நாட்டு மாதரார்களோ இவ்விரு பதாம் நூற்றுண்டிலும் முன்னுக்கு வருவதற்கு அஞ்சிக் கிணற்றுத் தவளைகளைப் போனறே இருக்கின்றனர். ஒரு நாட்டு மாதரின் முன்னேற்றத்திறகு மற்றொரு நாட்டு மாதரின் முன்னேற்றம் தூண்டுகோலாகவு மிருக்குமென்பது ஒருதலை.

எல்லாத் துறைகளிலும் முன்னேறி விளங்கும் மேனுட்டு மாதரார் சிலருடைய வரலாறறினைத்தானும் நம நாட்டு மாதரார் அறிவது, வாழ்க்கைப் பாதையில் முன் செல்வதற்குச் சிறந்த வழிகாட்டியாகவிருக்கும். இந்நோக்கத்தினைக் கொண்டே யாம் முன்னர் மேனுட்டுப் பெண்மணிகள் சிலருடைய வாழ்க்கை வரலாறறினைத் தமிழ நூல் வாயிலாக வெளியிட்டோம. இப்போது விக்டோரியாப் பேரரசி முதலியோருடைய வரலாற்றினை வெளியிடுகின்றேம்.

இந்நூல் இனிய எளிய நடையில் எழுதப் பெற்றிருக்கின்றது. இச் சிறு நூலினைப் படிக்கும் தமிழக மாதரார்களும் மேனுட்டுப் பெண்மணிகளைப் போன்று வாழ்க்கைத் துறையில் முன்னேறுதற்குப் பெரிதும் முயல்வார்களென்று எண்ணுகின்றேன். இச் சிறு நூலைத் தமிழகம் பெரிதும் மனமுவந்தேற்கும் என்னும் துணிவுடையேன்.

தி. நீலாம்பிகை

## பொருளடக்கம்

---



மறைமலையடிகளின் மகளாரும்
திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகத்தின் அமைச்சர் திருவாளர்
திருவரங்கம்பிள்ளை அவர்கள் மனைவியாரும் ஆகிய
தனித்தமிழ்த் திருவாட்டி
**தி. நீலாம்பிகை அம்மையார்**

# மேனாட்டுப் பெண்மணிகள்

## க. விக்டோரியாப் பேரரசி

### 1. பிறப்புங் குழவிக்காலமும்

விக்டோரியா அரசியார், இங்கிலாந்திற் பரம்பரையாக அரசு செலுத்திவரும் பழமையான அரச குடும்பத்திற் பிறந்தவர். இங்கிலாந்தில் நெடுங்காலம் அரசுபுரிந்த **மூன்றும் ஜார்ஜ்**, அரசியாரின் பாட்டனார் ஆவர். இவர் 1760-ஆம் ஆண்டு முதல் 1820 வரை அரசு செலுத்தினார். இவ்வரசர்பிரான் பல நற்குண நற்செய்கைகளுமுடையவர்; இவர், தங் குடிகளால் மிகவும் அன்பு பாராட்டப் பெற்றுப் புகழும் பெருமையு முடையராய் விளங்கினார். இவர்க்குப் பெண்ணும் ஆணுமாகப் பிள்ளைகள் பதினைந்து பேராவர். இவர்க்குப் பின், இவர்தம் முதல் மகனாரான **ஜார்ஜ்** என்பவரும், மூன்றும் புதல்வரான **வில்லியம்** என்பவரும் ஒருவர் பின் ஒருவராக இங்கிலாந்தை ஆண்டனர். இவர்தம் நான்காம் புதல்வர் **எட்வர்ட்** என்னும் கென்ட் செல்வர்தாம், நம் அரசியாரின் தந்தையாராவர்.

இவ் அரசர், தம உடன்பிறந்தார் அனைவரினும் நல்லியல்பு மிக்கவர். இவர், 1818-ஆம் ஆண்டு 'சாக்ஸ் கோபர்க்' என்னும் ஜர்மானிய செல்வர் ஒருவரின் புதல்வியாரை மணந்தார். மணந்த அடுத்த 1819-ஆம் ஆண்டில் அவர்கட்கு விக்டோரியா பிறந்தார். ரஷ்ய நாட்டரசராகிய அலெக்சாண்டர் பெயரையும், அன்னை

விக்டோரியா ஒன்பது திங்கட் குழவியாயிருக்கும்போது, அவர் தந்தையார், அரண்மனைப் பக்கத்தி லுள்ள வெளி யிடங்களில் உலாவிக்கொண் டிருக்கையில், திடீரென மழை பொழிந்தது. அரசர் மழையில் நனைந்து வீடுவந்து சேர்ந்தார். வந்ததும், தம் அருமைக் குழவி எதிரே தவழ்ந்து வருவதைக் கண்டு நனைந்த உடையையும் மாற்றுமல், அதனை எடுத்துக் கொஞ்சி விளையாடினர். பின், உள்ளே சென்று உடைகளை மாற்றினர். அது காரணமாக, ஈரம் உடலிற்றுக்கிக் காய்ச்சல்நோய் கடுமை யாக வரப்பெற்று அவர் மிகவிரைவில் இறந்து போனர்! விக்டோரியா அரசி, தந் தந்தையாரை நன்கு தெரியாத காலத்தே அவரை இழக்க நேர்ந்த அவரது ஊழ்வினைப்பயன் மிகக் கொடிது! அரசியின் அன்னை யார், தம் அருமைக் கணவனரை இழந்த துன்பம் ஒரு புறம் வருத்த, மற்றொருபுறம் குடும்பத் துன்பமும் பொறுத்தற் கரிதாயிருந்தது! இவர், தாம் பிறந்த நாடல்லாத இங்கிலாந்தில் இருக்க வேண்டியவ ரானர். இவர் அந்நாட்டு மொழியுங்கூட நன்ருகத் தெரியாதவர். தம் நிலைமைக் கேற்ற பொருள்வருவாயு மில்லாமல் துன்புற்ருர். இவ்வளவுக்கும் கென்ட் பெருமாட்டி மனந்தளராமல், தம் அருமை மகளாரின், வளர்ப்பு, கல்விப் பயிற்சி முதலியவற்றில் தம் கருத்தைச் செலுத்தி வந்தார். இவர் இவ்வாறு வருந்திய காலங்க ளில் அவர் உடன்பிறந்தாராகிய பெல்ஜியம் அரசர் லியோபோல்ட் என்பார் அவர்க்குப் பேருதவியா யிருந் தார். இவர், சில நேரங்களில் தம் உடன்பிறந்தாட்கு வேண்டும் பொருளுதவியுஞ் செய்துவந்தார். இவரைத் தவிர, அரசியாரிடத்து, இவர் சிறிய தகப்பனரான யார்க் அரசரும், பெரிய தகப்பனரின் மனைவியாரான

அடியலெய்ட் அம்மையாரும் மிகவும் அன்பாயிருந்தனர். இவ் அடியலெய்ட் அரசியாரின் இரண்டு பெண் குழந்தைகளும் ஒன்றன்பின் ஒன்று யிறந்தன! 'அரச நிலையை நம் மக்களிருவரும் இருந்து அடைவதற்கில்லையே என்றெண்ணுமல், அவர் கென்ட் பெருமாட்டியிடமும், விக்டோரியா விடத்தும் மிக்க நல்லெண்ணத்தோடு அன்பு கொண்டார்.

## 3. சிறுமிக் காலம்

இப்போது, விக்டோரியாவுக்குக் குழவிக்காலம் நீங்கிச் சிறுமிக்காலம் வந்தது. இக்காலமுதல் அரசி, தம் அன்னையாரால் மிக ஒழுங்காக வளர்க்கப்பட்டார். பெருஞ் செல்வக் குடும்பங்களில் ஒரே குழந்தையாயிருந்தால், அதன் பெற்ருேர் அதற்கு அளவுக்குமிஞ்சி ஆடை அணிகலன்களை அணிவிப்பதன்றி, முறையும், நேர ஒழுங்கு மின்றி உணவு கொடுத்துக் கெடுத்து விடுகின்றனர். கல்விப் பயிற்சி, சிறந்த பழக்கம் முதலியவற்றிற் சிறிதும் அவர்களைப் பழக்குவதில்லை. தமிழ்ச் செல்வ மாதர்களின் நிலை இப்போதுதான் இவ்வா றுள்ளது. பண்டைக்காலப் பெருஞ் செல்வ மகளிரான ஔவையார், கண்ணகி, மணிமேகலை, காரைக்காலம்மையார், திலகவதியார் மங்கையர்க்கரசியார் முதலான அருந்தவப் பெண்மணிகள் தம் தாய் தந்தையரால் உயர்ந்த முறையில் வளர்க்கப்பட்டுப் பேரறிவாளர்களாய் விளங்கினமை அறிந்தோமன்ருே? செல்வமிக்க தமிழ் மாதர்களிடையே கல்வியறிவு குறைபட்டதால் இஞ்ஞான்று அவர்நிலை முற்றும் வேறுபட்டது. நம் முன்னவர்போல், விக்டோரியா அரசியாரின் வளர்ப்புச் சீரிய முறையில் அமைக்கப்பட்டது.

அரசியார் காலை எட்டு மணிக்குத் தம் அன்னையுட னிருந்து கோதுமை அப்பமும் பாலும் உண்பார். பின் சிறிது நேரம் தோட்டத்தில் உலாவிக் கைவண்டி ஓட்டி விளையாடுவார். பின்னர், பத்து மணியிலிருந்து பன்னி ரண்டு மணி வரையில் படித்தல், எழுதுதல், கணக்குப் போடல் முதலியவற்றில் ஈடுபட்டபின், தோட்டத்தில் பூஞ்செடிகளுக்குத் தண்ணீர் விட்டு அவற்றிற்குப் பாத்தி கட்டுவார்; பகல் ஒன்றரை மணிக்குப் பக லுணவு உட்கொள்வார். பிற்பகல் நான்குமணி வரை யிற் கல்வி பயின்று, மாலை வேளைகளில் தம்மை ஒத்த பிள்ளைகளோடு பசும்புற் றரையில் விளையாடி வேடிக்கையாகப் பேசிப் பொழுது போக்குவார். இரவு ஆண்டவனை வணங்கியபின் உணவுகொண்டு தன் அன் னையாரின் பக்கத்தே இடப்பட் டிருக்கும் படுக்கைக்குச் செல்வார்.

அரச குடும்பத்திற் பிறந்த விக்டோரியா அரசியார் சிறிதும் சோம்பலாய் இருத்தற்கு இடனில்லா வகையில் வளர்ந்தார். மிகச் சிறந்த உணவுகள் அடிக்கடி அவர்க் குக் கொடுக்கப்படவில்லை. எளிய முறையிலேயே நல்ல உணவு தரப்பட்டமையாலே, அவர் உடல்நல முடைய ராய் வளர்தற்கு இடனுயமைந்தது! மாலை சிற்றுண்டி கூட அவர்க்குக் கொடுக்கப்படவில்லை. நீண்ட நாட் களுக்குப் பின்னரே விருந்து நேரங்களில் அவர்க்குக் காப்பி கொடுக்கப் பட்டதாம்.

இவ்வாறு, அரசியார் நல்ல முறையில் வளர்க்கப் பட்டமையாலேதான், இவர் தம் பிற்கால அரச வாழ் வில் மிகச் சுறுசுறுப்பாகவும், அறிவு நுட்பத்தோடும் நடந்து பல பெரிய நன்மைகளைச் செய்வாராயினர். ‘இவர், தம் குழவிக் காலத்திலேயே தம் அருமைத்

தந்தையாரை இழந்தாராயினும், இவர் அன்னையாரும் மாமனார் லியோபோல்ட்டும் பெரிய அன்னையாரும் இவரை மிக அன்பாக வளர்த்து வந்தனர். அரசி, பின்னர் அடையப் போகும் நிலை எவ்வாறு யிருப்பினும் அவர்க்கு, ஐந்தாவது ஆண்டிலிருந்து கல்வி கற்பிப்பது மிகவும் இன்றியமையாததென்று அவர்கள் எண்ணினார்கள்.

## 4. இளமைக் காலக் கல்விப் பயிற்சி

விக்டோரியாவுக்கு ஆசிரியர்கள் இருவர் அமர்த்தப் பட்டனர். ஒருவர் **டேவிஸ்** என்பார். மற்றொருவர் **லெஷன்** பெருமாட்டி யாவார். இவ்வாசிரியர்களிடம் அரசியார் மிக அன்போடும், பணிவோடும் தன் தாய்மொழியாகிய ஆங்கிலமும், ஜர்மன், பிரஞ்சு முதலான மொழிகளையும் நன்கு பயின்றார். இலத்தீனும் கிரீக்கும் கற்றார். இன்னும், இவர் கணிதம், இசை, சட்டம், வரலாறுகள் முதலானவைகளையுந் திறம்படக் கற்றுத் தேர்ந்தார். அரசியார்க்கு இயற்கையிலேயே ஓவியம் வரைதல், இசை பாடுதல் ஆகிய இவற்றில் மிகுந்த விருப்பம். இவரது குரல் மெல்லிதாகலான், இவர் இசைக்கருவியிற் பாடும்போது இனிமையா யிருக்கும். ஒருகால், அரசியார் தங் கணவருடன் இல்லறம் நடாத்துகையில், இசை வல்லுநரான **மெண்டலோசன்** என்னும் ஜர்மானியர் அரசியாரைக் காண வந்தார். அப்போது, இவர், தாமியற்றிய இசைநுட்பம் வாய்ந்த சில பாட்டுக்களைப் பாடினார். அரசியார், தாமும் ஒரு பாட்டுப் பாடுவதாகக் கூறி, அவர் புத்தகத்தி லுள்ள ஒரு பாட்டை எடுத்து இசை தவறாமல் மிகத் திறமையாகப் பாடி முடித்தாராம். இது கண்ட அவ் விசைப்

புலவர். 'அரசியாரா யிருந்தும் எத்துணைப் பாடுபட்டு அவர் இசையுங் கற்றிருக்கின்றாரென்று' வியந்தாராம்.

நம் பெண்மக்களிற் சிலர், இசைக் கருவிகளைக் கற்றிருந்தாலும், எவரேனும் அவர்களை இசைமீட்டி ஒரு பாட்டுப் பாடச் சொல்லி எவ்வளவு நேரங் கேட்டாலும் பாடமாட்டார்கள். அரசியாரைப் பாடக்கேட்டல் அவர் பெருநிலைக்குத் தகுமோ என்று அவ்விசை நூற் புலவர் எண்ணுநிற்ப, தாமே வலிந்து, சிறிதும் பெருமையுஞ் செருக்குமின்றிப் பாடிய இவரது இனிய உள்ளத்தின் சிறப்புச் சாலச் சிறந்ததன்றோ !

## 5. அரசியின் உள்ள நிலை

அரசியார் இயற்கையிலேயே பல நல்லியல்புகள் அமையப் பெற்றவராகலான், இவர்தம் அன்னையார் இவரைத் தக்க முறையில் வளர்ப்பது எளிதாயிற்று. ஒருகால், விக்டோரியா தம் ஆசிரியரிடத்துப் படித்துக் கொண்டிருக்கையில், விளையாட்டின்மேற் கருத்துடன், பாடத்தை விரைந்து முடிக்குமாறு அவரை நெருக்கினார். அப்போது அரசியின் அன்னையார் அங்கு வந்து லெஷன் அம்மையாரை நோக்கி 'இன்று இளவரசி எப்படி நடந்தாள் ?' என்று கேட்க, அவர் 'ஒருமுறை மட்டும் யான் சொன்னபடி அவள் நடக்கவில்லை' என்றார். உடனே விக்டோரியா, தம் அன்னையின் சினத்தையுங் கருதாமல், உண்மை சொல்ல வேண்டுமென்று ஆசிரியரைப் பையத்தொட்டு 'யான் இருமுறை குற்றஞ் செய்தேன்' என்றனர். அரசியார், தம் சிறுமிக் காலத்திலேயே பொருள்களைக் கையாளும் முறையிற் சிக்கனமாயும், கடன் வாங்குவதில் விருப்ப மில்லாமலும் இருந்தார். ஒருநாள், இவர் கடைக்குப் போய்த் தமக்கு

விருப்பமான விளையாட்டுக் கருவி ஒன்றை வாங்க வேண்டுமென்று ஆவல் கொண்டார். ஆனால், அதற்குப் போதுமான பணம் அவரிடம் இல்லாமையாற் சிறிது தயங்கினார். அப்போது, கடைக்காரன், 'பணம் பிறகு தரலாம், விரும்பியதைக் கொண்டு போங்கள்', என்றான். அரசியார் அதற்கு உடன்படாமல், அவ்விளையாட்டுக் கருவியை அவன் விலைப்படுத்தாமல் வைக்க வேண்டு மென்று சொல்லிவிட்டு வந்து, மறுநாள் பணத்தைக் கொண்டு போய்க் கொடுத்து அதனை வாங்கி வந்தார்.

உலக இயற்கை நன்றாய்த் தெரியாத காலத்திலேயே கடன் வாங்க லாகாதென்று இளவரசி எண்ணிய சிறந்த எண்ணம், ஆண்டின்மிக்க பெருஞ்செல்வர்கள், அரசர் களுக்குக்கூட வாய்த்தல் அரிதினும் அரிது! "தொட்டிற் பழக்கம்சுடுகாடுமட்டும்' என்ற பழமொழிப்படி, தம் சிறு மிக் காலத்தில் அமைந்த இவ்வுயர்ந்த இயற்கையானது, அரசி வளருந்தோறும் உடன் வளர்ந்து, வேரூன்றிப் பின், பல சிறந்த இயல்புகளுக்கும் காரணமாயிற்று. அரசி யார், ஒரு குற்றஞ் செய்தால், அதனை உடனே ஒப்புக் கொள்ளும் இயல்பினர். ஒரு நாள், இவர் ஒரு கெட்ட நாயோடு விளையாடப் போம்போது, அந்நாயின் தலைவன் இவரைத் தடுத்தான். அதைக் கேளாமல், அதனுடன் அவர் விளையாட, அது சினங்கொண்டு அவர்மேற் பாய்ந்தது. அதுகண்டு நாய்க்குரியோன் அதைத் தடுத் துப்பிடித்து அப்புறந் தள்ளினான். அப்போது, அரசியார் 'நீ சொன்னது முறையே; யான் செய்ததுதான் பெருங் குற்றம்! இனி இந்நாயோடு விளையாட மாட்டேன்' என்று அவனிடங் கூறினார். இன்னுமொருகால், வைக் கோற் போரின் பக்கத்தே யிருந்து வைக்கோற் குருவி செய்து கொண்டிருக்கும் போது, அதனை முடிப்பதற்கு

முன் விளையாட ஓடினார். அதுகண்டு அவரன்னை அவரைத் தடுத்து, எடுத்த வேலையை முடித்த பின்னர்தான் அப்புறம் போதல்வேண்டுமென்று கடிந்தார். விளையாடும் போதுங்கூட விக்டோரியா மனம்போல எதனையும் அரைகுறையாய்ச் செய்ய அவர் அன்னையார் விடமாட்டார்.

விக்டோரியா, தம் இளமைக் காலத்திலேயே ஈவு இரக்க முடையவர். இவர், தாம் சேர்த்து வைக்கும் பொருளை ஏழை எளியவர்கட்குக் கொடுப்பதில் பெரு விருப்பமுடையவர். ஒருமுறை ஒருநாடகமாது, தங் கணவனை இழந்து வறுமையால் துன்பப்படுகின்றாளென்று அறிந்து, இவர் தாம் சேர்த்து வைத்த பணத்தோடு மேலும் நூறு சேர்த்து இருநூறு காசுகளைத் தாமே கொண்டுபோய் அவளுக்குக் கொடுத்தார். இதைப்போன்ற அறநிகழ்ச்சிகள் பலஉள. விரிக்கிற் பெருகும்.

## 6. அரசியாக வரும் நிலை அறிதல்

இவ்வாறு இளவரசி கல்வி, அறிவு, நற்குண, நற்செய்கைகளில், நாளுக்கு நாள் மேலோங்கி வளர்ந்தார். இவர்தம் அரசகுடும்பத்தில், இவருக்கு முன் பட்டத்திற்குரியவர்களெல்லாரும் ஒருவர்பின் ஒருவராக இறந்தனர். விக்டோரியா அரசியாரே முடிவில் பட்டத்திற்கு உரியவரானார். இச்செய்தியைக் கென்ட் பெருமாட்டி தம் மகளார்க்கு முன்னரே அறிவித்தால், அதனால், அவர் செருக்குற்று வீணான ஆரவாரங்களில் விருப்பங் கொள்வாரோ என்று அச்சங்கொண்டிருந்தார். இப்போது, அவர் தகுதியுடையவரா யிருக்கும் நிலையினைக் கென்ட் அரசியார் உணர்ந்து, பட்டத்திற்கு விக்டோரியா ஆளாயிருக்குஞ் செய்தியை விளக்கி ஒரு கடிதமெழுதி அவர்

படிக்கும் புத்தகமொன்றில் வைக்குமாறு அவர்தம் ஆசிரியர், லெஷன் பெருமாட்டிக்கு அறிவித்தார். அவரும் அவ்வாறே செய்தார். அரசியார் படிக்கப் புத்தகத்தைத் திறந்தபோது, அக்கடிதத்தைக் கண்டு படித்தார். அதன் பொருளை அறிந்தபின், அவர் தம் ஆசிரியரை நோக்கி, "யான் எண்ணியிருந்ததைவிட அரசுரிமைக்குக் காலம் நெருங்கிவிட்டதாகக் காண்கிறேன். அரசியாவதில் எவ்வளவோ பெருமைதான் ; ஆனாலும், அதில் எவ்வளவோ மிக்க பொறுப்பும் சுமையுமுள்ளன. நான் நல்லவள் என்று பெயரெடுக்க முயல்வேன் ; மற்ற சிறுமிகளைப் போலன்றி, எனக்குப் பல அருமையான பொருள்களைக் கற்பிப்பதன் நோக்கத்தை இன்றுதான் அறிந்தேன்" என்றார். 'நான் நல்லவளாயிருப்பேன்' என்று விக்டோரியா, தம் இளமையிற் கூறிய உறுதிமொழிக்கிணங்கவே தம வாழ்நாள் முடிவுவரை நடந்தார்!

அரசியார், தாம் அரசாளுதற்குரிய நாடு நகரங்களைக் காணுமாறும், மக்கட் கூட்டங்களைக் கண்டு திகைப்படையாமற் பழகும்பொருட்டும், ஒவ்வோராண்டிலும் வெளியூர்கட்கு அனுப்பப்பட்டார். இவர் பதினெட்டாண்டை அடைந்தவுடன், எந்தக் காரியத்தையும் நன்றாகக் கூர்ந்து நினைந்து நடத்தக் கூடிய பேராற்றல் அமையப் பெற்றார். இப் பதினெட்டாவதாண்டில் அரசியாரின் பேரழகைப்பற்றி ஈண்டுச் சொல்லவும் வேண்டுமா! அவரது அரச நிலைக்கும், உள்ள நிலைக்குந் தக்கபடி அவர் வடிவழகும் அமைந்திருந்தது. ஆண்டவனருளென்றே சொல்லல் வேண்டும்! இறைவன் தந்த பேரழகே அரசியார்க்கு இயற்கையாக அமைந்ததே தவிர ,இவர் ஏனைய அரசிகளைப்போல் உயர்ந்த ஆடை அணிகலன்கள் அணிவதில் விருப்பங் கொண்டாரல்லர்.

## 7. அரசியார் பட்டம் பெறல்

விக்டோரியா அரசியார் பட்டத்திற்கு வாராமல் தடுப்பதற்குச் சிலரால் சூழ்ச்சிகள் செய்யப்பட்டன. ஆயினும் அவை ஒன்றும் வெற்றிபெறவில்லை. அரசியவிலுள்ளார் அனைவரும் ஒரே மனதாக விக்டோரியாவையே அரசியாக்க முயன்றனர்.

## 8. வில்லியம் அரசர் இறப்பு

வில்லியம் அரசர் 1837 ஜூன் திங்கள் இருபதாம் நாள் இவ்வுலக வாழ்வை நீத்தார். அரசர், இரவு இரண்டரை மணிக்கு இறந்தவுடன், இளவரசிக்கு இதனை அறிவிக்கும்பொருட்டுக் **கேன்டர்பரி** குருவும், அமைச்சர் **சேம்பர்லினும்** புறப்பட்டு விரைவாய் அரண்மனைக்குச் சென்றனர். இவர்கள் சென்றநேரம் விடியற்காலை ஐந்து மணி. அப்போது, அரண்மனையில் எவரும் எழுந்திராமையால் எங்கும் ஓசையின்றி அமைதியாயிருந்தது. வந்தவர்கள் இருவரும் வாயிலில் நெடுநேரம் நின்று, கதவைத் தட்டி மணி அடித்தனர். விக்டோரியாவின் தோழிகளில் ஒருத்தி வெளியே வந்து செய்தியை அறிந்து போய், அரசியை எழுப்பினாள். விக்டோரியா, அவர்கள் வந்த காரியம் அறிந்தவுடன், நொடிப் போதேனும் அவர்கள் காத்திருக்கலாகாதென்று உடனே படுக்கையைவிட்டெழுந்து, இரவு உடுத்த உடையின்மேல் ஒரு போர்வையைப் போர்த்துக்கொண்டு, அவிழ்ந்த கூந்தல் தோள்மேற்புரள, விரைந்து வந்து அவர்கள் முன் நின்றார். அரசியின் கையை அவர்கள் முத்தமிட்டுத் 'தாங்கள் எங்கட்கு அரசியாகக் கடவீர்' என்று சொல்லி நடந்த செய்தியை அறிவித்தார்கள். அவர், தம் அருமைப் பெரிய தந்தையாராகிய அரசர் இறப்பிற்கு

வருந்திக் கண்ணீர் உகுத்தார். பின், அவர், தம் குரு மகனுரை நோக்கி 'எனக்காகக் கடவுளை வணங்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்' என்ருர். அவர்கள் உடனே தரையில் முழங்காலிட்டு ஆண்டவனே! அரசியார், மேற் கொள்ளப்போகும் அரசியற் சுமையைத் தளராமல் ஏற்பதற்கு, நீரே அருள்புரிதல் வேண்டுமென்று வேண்டினுர்கள். பின், நிகழவிருக்கும் முறைகளை அரசியார்க்குத் தெரிவித்துச் சென்ருர்கள்.

## 9. அரசியார் முதற்பேரவைக்கு வரல்

அன்றைக்கே, பகல் பதினொரு மணிக்கு, விக்டோரியா முதற்பேரவைக்கு எழுந்தருள வேண்டியவராஞர். உலகம் நன்ருகத் தெரியாத இளமைக் காலத்தில், பேராற்றல் மிக்காரும் அஞ்சிப் பின் நிற்கத்தக்க பெரிய அரசியற் பொறையை ஏற்றுக்கொள்ளுமாறு ஆண்டவன் அரசியார்க்கு அருளினுன். ஆகலான், அவர் அரசவையை மேற்கொள்ளப் போகுங் காட்சியைக் காணப் பெரியோர்களும், பெருஞ் செல்வர்களும், பெருங் கூட்டமாக அரசவையிற் கூடினுர்கள். அமைச்சர்களும், வேறு பெரியோர் அறுவரும் அரசியாரிடம் சென்று, அவையில் நடத்தவேண்டும் முறைகளைக் கூறி, அதற்கவர் எழுந்தருளுமாறு வேண்டினுர்கள். பின்னர், அரசியார், தம் தந்தையா ரிருவரும் தம்மை எதிர்கொண்டழைத்து வர, அரசப் பேரவைக்கு எழுந்தருளி அங்குக் குழுமியிருக்கும் பெரியார்களுக்கு வணக்கஞ்செய்து அரியணையில் அமர்ந்தார். பின்பு அரசியார் அவையோர்களைப் பார்த்துச் சிறிதும் மனக் கலக்கமில்லாமல், தாம் சொல்ல வேண்டிய பொருள்களைத் தெளிவாக யாவருங் கேட்கும்படி படித்தார். அப்

போது, அரசியார், ஆண்டிற் சிறியவராயினும், அறிவிற் பெரியாராயிருக்கும் பெருநிலையைக் கண்டு, அவையினர் பெரிதும் வியந்தனர். அரசியார் அவையிற் பேசியது:—

"என் அருமைப் பெரிய தந்தையாரான அரசர் பெருமான் இறந்து போனமையால், யான் இவ் அரசியற் சுமையை ஏற்றுக்கொள்ள வேண்டியவ ளானேன். அஞ்சத்தக்க இச்சுமையை, இவ்வளவு இளமையில் தாங்குமாறு செய்த எல்லாம் வல்ல ஆண்டவன், அதனை யான் செவ்வையாக நடத்தப் போதுமான வன்மையை எனக்குக் கொடுப்பார். இறைவனருளையும், என் அருமைக் குடிமக்களின் அன்பையும் நன்றியையுமே யான் உறுதியாக நம்பியிருக்கின்றேன். எல்லோரும், அவரவர் கொள்கைகளைக் கையாள உரிமை அளிப்பினும், சட்டப்படி ஏற்படுத்தப்பட்ட கொள்கையைத் தவறாமல் நிலைபெறுத்துவது என் பெருமுயற்சியாகும். என் குடிகளில் ஒவ்வொரு பகுப்பினருந் தத்தம் நலங்களை மேன்மேலும் பெருக்கிக் கவலையின்றி வாழுமாறு காக்கக்கடவேன்," என்று படித்து முடித்தார்.

பின், முதன்மையான அமைச்சர்களும், சிறிய தந்தையா ரிருவரும் அரசியார்க்குக் கீழ்ப்படிந்து நடப்பதாக உறுதி கூறினார்கள். ஆண்டின்மிக்க அவ்விருவரும் அவர்முன் பணிந்து நின்றபோது அரசியார்க்கு மனங் கலங்கியது! 'அரசியாரை மகிழ்வோடு ஏற்றுக்கொண்டோம்,' என்பதற்கு அறிகுறியாக, முடிவில் அவரது கையை முத்தமிட்டுச் செல்வது அந்நாட்டு வழக்கமாயிருந்தது. பெரியாரொருவர் அரசியாரின் கையை முத்தமிடத் தள்ளாடி வரும்போது படியேற முடியாமல் வருவதைக் கண்ட அரசியார், உடனே, தம் அரியணையி

னின்றும் எழுந்து, அவரருகிற் சென்று தம் அருமைக் கையை நீட்டினார்!

> 'பணியுமா மென்றும் பெருமை சிறுமை
> அணியுமாந் தன்னை வியந்து.'

என்ற திருவள்ளுவர் திருமொழி அரசியார் பால் சிறந்து விளங்கியது! அரசியார் காட்டிய இச்செயல் அவரது செருக்கற்ற உள்ளத்தின் சிறப்பை விளக்குகிறதன்றோ? இன்னும் அரசியார் தம் சிறிய தந்தையாரிருவரிடத் தும், அப்பேரவையிற் காட்டிய அன்பும் பணிவும் எல் லோர்க்கும் பெரு மகிழ்வை விளைத்தன! இன்னொன்று இங்கே உன்னிக்கற் பாலது.

அரசி, ஆண்டிற் சிறிய பெண்மகள்தானே என்று நினையாமல் அப்பேரவையி லுள்ளா ரனைவரும், அவரது அறிவையும், உள்ளப்பெருந் தகைமையையுமே பெரி தாக எண்ணி அவரைப் பணிந்து நின்றமை பெரிதும் பாராட்டத் தக்கதாயிருந்தது. அரசியாரது மனம் மாசற்றதாகலான், அதன் பயனாகவே, அந்நாட்டுப் பெரியார் சிறியார் அனைவரும் ஒரே மனதாய் ஆண்டிற் சிறியாரான அவரைத் தம் பேரரசியாக ஏற்று மகிழ்ந் தனர்! மக்கள் உருவத்தாற் பெரியாராதலும் சிறியா ராதலும் இல்லை. அவரவர் அறிவுஞ் செயலுமே பெரி யனவாகக் கொள்ளப்படுமென்பது நம் அரசியாரிடம் அறிந்து கொள்ளலாம்.

> 'உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
> கச்சாணி அன்னா ருடைத்து.'

என்னுங் குறள்மொழி ஈண்டுப் பொருந்துதல் காண்க. இப்பேரவை கலைந்து பெரியோர்களெல்லாம் விடை பெற்றுச் சென்றபின், அரசியார் மிகவுங் களைத்துப்

போய்த் தம் அன்னையார் மார்பின்மீது சாய்ந்து கண்ணீர் பெருக்கினார். இச்செயலை '**இன்பக் கண்ணீர் உகுத்த அரசி**' என்ற தலைப்பின்கீழ் **ராபர்ட் பிரௌநிங்** என்னும் பெண் புலவர் ஒருவர் மிக அழகாகப் பாடினார்.

அன்னையாரிட மிருந்து ஆறுதலும் வாழ்த்தும் பெற்றபின், அரசியார் தம் அறைக்குச் சென்று இரண்டு மணி நேரம் தனியே யிருந்து, அதுவரை நடந்தவற்றையும்,இனி நடைபெறப்போகும் அரசியல் நிகழ்ச்சிகளையும் மனதில் எண்ணி ஆண்டவனை மிக உருக்கமாக வேண்டி வணங்கினார். பெரு நிலையோ, பெரு மகிழ்ச்சியோ கிடைக்கப் பெற்றவர்கள், அவற்றை அளித்த ஆண்டவனை நினையார்; அவற்றாற் செருக்குறுவாரும் உளர். ஆனால், அரசியாரோ அந்நன்னாளிலிருந்து எல்லாம் வல்ல இறைவனைத் தனியேயிருந்து வணங்கும் உயர்ந்த பழக்கத்தைக் கைக்கொண்டார்.

இவர், அரசியாராயமர்ந்தபின், இவர்தம் பெரிய அன்னையார்க்கு ஆறுதல்கடித மெழுதியதில், 'மாட்சிமை தங்கிய எம்மையாளும் மாபெரும் அரசியாரவர்களுக்கு' என்று முகவரி எழுதியிருந்தார். அது கண்டவர், 'அவர் பட்ட மிழந்துவிட்டதனால் எம்மையாளும் பேரரசி' என்று எழுதலாகாது என்றார். அதற்கு அரசி "ஆம், பெரிய அன்னையின் நிலை மாறியிருத்தல் யானறிவேன்; ஆயினும், அதனை நானே அவர்க்கு முதன்முதல் உணர்த்தி எழுதி நினைவூட்டுதல் தகுமோ?" என்றார். இவர், தம் பெரிய அன்னையின் உள்ளம் மகிழத் தக்க நிலையில் நடந்து வந்தார். அடியலெய்ட் அரசியார், தம் அழகிய **வின்ட்சர்** என்னும் பெரிய அரண்மனையை, தம் திருமகளார் விருப்பப்படி எவ்

வளவு காலம் வேண்டுமானாலும் பயன்படுத்திக் கொள்ளலாமென்று மிக அன்போடு அவர்க்குத் தெரிவித்தார்.

## 10. அரசி முடி அணிதல்

விக்டோரியா அரசியார், பட்டத்திற்கு வந்து ஓராண்டு வரையில் முடிசூட்டு விழா நடைபெறவில்லை. அம்மாபெரு விழாவிற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்ய ஓராண்டாயிற்று. இதுவுமன்றிப் பழைய **முடி அணி** (கிரீடம்) சுமைமிக்கதா யிருந்தமையின், அது விக்டோரியா மெல்லியலார் அணிதற்கு ஆகாமை கண்டு, அதிற் பாதி அளவினதாய்ப் பன்னிரண்டு நூறாயிரம் விலைபெறத்தக்க ஒளிமணிக்கல் இழைத்த அழகிய **முடியணி** ஒன்று அரசியார்க்குச் செய்யப்பட்டது. அது முடிந்தபின், 1838-ஆம் ஆண்டு ஜூன் திங்கள், 28-ஆம் நாள் அரசியார்க்கு முடிசூட்டும் நன்னாள் உறுதிப்படுத்தப்பட்டது.

இந்நற்செய்தி நாடு நகரம் ஊரெங்குந் தெரிவிக்கப்பட்டது. இக்காட்சியைக் காணப் பல நாட்களுக்கு முன்னரேயே, பல நாடு நகரங்கள் ஊர்களிலிருந்து சிற்றரசர்களும் பெருஞ் செல்வர்களும் ஏனையோர்களுமாகப் பெருந்திரளானவர்கள் இலண்டன்மாநகரில் வந்து தங்கினார்கள். முடிசூட்டும் நன்னாள் நெருங்க நெருங்க, மக்களுடைய மனக் கிளர்ச்சியும், விழாக் காணும் பேராவலும் மேன்மேற் பெருகுவவாயின. அச்சிறந்த நாளாகிய ஜூன் மாதம் 28-ஆம் நாள் விடியற்காலை, முடிசூட்டு முழுக்கு நடக்கும் இடமாகிய **வெஸ்ட் மினிஸ்டர்** கோயிலில் அளவிடப்படாத பெருங்கூட்டங் கூடுவதாயிற்று. நகரமெங்கும் வெடிகளும் மணிகளின் ஓசையும் மக்களின் காதுகளைத் தொளைத்தன. அன்று காலை 10 மணிக்கு அரசியார், அவ்

விழாவிற் கேற்ற ஆடை அணிகலங்களை அணிந்து தம் அரண்மனையை விட்டு, எட்டு வெண்ணிறக் குதிரைகள் பூட்டிய அழகிய வண்டியிலேறி, அதன் முன்னே இசைக் கருவிகள் பல முழங்கவும், போர் மறவர்கள் கொடிகள் பிடிக்கவும், மெய்காப்பாளர்கள் படைக் கலன்களுடன் அணி அணியாக முதலிற் செல்லவும், சிற்றரசர்களும், தலைவர்களும் தத்தம் சிறப்புகளோடு செல்லவும், அரச குடும்பத்தார் அவரவர் ஊர்திகளில் வரவும், இத்துணைப் பெருஞ் சிறப்போடு அத்திருக் கோயிலுக்குச் செல்வாராயினர்! செல்லும்போது, மக்க ளெல்லாரும் அரசியாரைக் கண்ணாரக் கண்டு, 'எம் அரசி வாழ்க ; எம் இங்கிலாந்தை ஆளும் இறைவி பல் லாண்டு' வாழ்க' என்று வாழ்த்தும் பேரொலியே அந்நகரெங்கணும் கேட்டது! மலர்மழை எங்கும் பொழியப்பட்டது. இவ்வாறு, கடல்போற் காணப் படும், மக்கட் கூட்டத்தையும் அவர்கள் தம்மை வாழ்த்தி, ஆரவாரிக்கும் பேரொலியையுங் கண்டுங் கேட்டும் அரசியார் அளவிலா மகிழ்ச்சியினால் கண்ணீர் விட்டு மனங்கரைந் துருகினர். அப்பெருங் கூட்டத் திடையே அரசியற் காவலாளர்கள் பிரம்பாலடித்து மக் களை விலக்குகையில், இரக்கமே வடிவாயமைந்த அரசி யார் கண்டு வருந்தி, அவர்கள் அவ்வாறு அடித்த லாகா தென்று கட்டளை யிட்டார்!

இங்ஙனம் பேரழகு செய்யப்பட்டு விளங்கும் பெரிய தெருக்களைக் கடந்து, அரசியார் வெஸ்ட்மினிஸ் டர் திருக்கோயிலின் முன்னே இறங்கினர். அப்போது வாயிலில் செங்கோல், மணிமுடி ,அரசடையாளங்கள் முதலியன ஏந்திநின்ற அரசியற்றலைவர்களும், பூந்தட்டுக் கள், பொற்கிண்ணங்கள், அவர்தம் மறைநூல் முதலிய

வற்றைத் தாங்கி நின்ற குருமார்களும் அரசியாரை உள்ளே அழைத்துச் சென்றனர். அங்குப் பொன்னொளி மிளிருங் கடவுளிருப்பிடத்தின்முன், பொற்றுகில் விரித்த மேடைமேல் அமைக்கப்பட் டிருந்த இரண்டு இருக்கைகளில் ஒன்றில் அரசியார் அமர்ந்தனர். அந்நேரம் வரையில் மறைந்திருந்த பகலோன், வானத்தைத் திறந்துகொண்டு பேரொளி வீசி, அரசியார் வீற்றிருக்கும் அளப்பருங் காட்சியைக் காணுமாறு வெளித்தோன்றினன்! இங்ஙனம், கதிரவன் திடீரென வெளிப்பட்டது பெரியதொரு நற்குறியென்று மக்கள் மகிழ்ந்தனர்.

பின்னர், அக்கோயிலின், முதற்குரு, அவையோர்களைப் பார்த்து, 'பெரியோர்களே! தொன்றுதொட்டு வரும் வழக்கப்படி இந்நாட்டுக்குரிய அரசியார் அவர்களை இதோ உங்களெல்லாருடைய முன்னிலையிலும் தருகின்றேன். இன்று, இவரது செங்கோலின்கீழ் அமைந்திருப்பதாக உறுதிமொழி கூற வந்திருக்கும் நீங்கள் இவரை அரசியார் என்று ஒப்புக் கொள்வதில் விருப்பந்தானா? என்று கேட்டனர். உடனே, அங்குக் குழுமியிருந்தா ரனைவரும் அடங்கா மகிழ்ச்சியோடு, 'விக்டோரியா அரசியாரை எம்மையாளும் அரசியாராக ஏற்றுக் கொள்ளுகிறோம்,' என்று வாய்விட்டுக் கூறி வாழ்த்தினார்கள்! அதன் பிறகு, ஆண்டவனுக்குச் சிறப்பாக வழிபாடுகள் செய்யப்பட்டன. பின், அரசியார் ஒரு பொற்றுகிலும், ஒரு பொற்கட்டியும் கோவிலுக்குப் பரிசாகக் கொடுத்தனர். இப்பரிசுகளையும், செங்கோலையும், முடியணியையும், பிற அரசடையாளங்களையும் கடவுள் மேடைமீது வைத்து முறைப்படி இறைவனுக்கு வணக்கஞ் செய்து

ஓர் அருமையான விரிவுரையுங் குருமகனால் செய்யப் பட்டது. பின்னர், பொன்னூல் விளிம்புகளிட்ட, பொன்னுடை ஒன்றை, போர் மறவர்கள், நான்கு பக்கங்களிலும் நின்று மேல்விரித்துப் பிடிக்க, அதன் கீழ் இடப்பட்ட அரியணையில் அரசியார் அமர்ந்தனர்! அப்போது, கடவுள் மேடைமேல் வைத்திருந்த ஒரு பொற்சிமிழிலுள்ள எண்ணெயால் தம் தலையையுங் கையையுந் தொட்டுப் பூசப்பெற்றார். அதன்பின், பெருமாட்டிகளும், பெருமான்களும் ஒரே காலத்தில் தத்தம் முடிகளை அணியும்போது, விக்டோரியாப் பேரரசியாருக்கு விலைமிகுந்த மிக அழகிய முடியணி சூட்டப்பட்டது.

அரசியார் முடிசூட்டப்பெற்றுக் கையில் செங்கோல் ஏந்தி அரியணையில் வீற்றிருந்தபோது, வானினின்றும், எல்லாம் வல்ல இறைவியே இறங்கி வந்து இருந்தது போலிருந்தது! இக்காட்சியின் பெருமையும் அழகும் சொல்லுந் தரத்தன அல்ல! இவ்வொப்பற்ற வனப்பு மிக்க காட்சியைக் கண்டதும், மக்களெல்லாரும் பேரின்பக் கடலில் மூழ்கிக் கைகொட்டிப் பேரிரைச்சலிட்டு வாழ்த்தி மகிழ்ந்தனர்.

அக்கோயிலின் முதற்குரு, அரசியைப் பார்த்துத் 'தாங்கள் மனக்கலக்கமின்றி உள்ளக் கிளர்ச்சியோடு இருக்கக்கடவீர்!' என்று உரக்கச்சொல்லி வாழ்த்தினர். உடனே மக்களனைவரும், 'ஆண்டவனே! நின் அருளால் எம் அரசி மகிழ்வோடிருப்பாராக!' என்று பொருள் தரும் பாட்டைப் பாடினர். அவர்தம் மறைநூலொன்று அரசியார்க்கு அளிக்கப்பட்டது. பின்னர் அரசர்களும், ஏனைப்பெரியோர்களும் அரசியை அடுத்துவந்து ஒவ்வொருவராகத் தலைவணங்கித் தாழ்ந்து அன்போடு,

அவர்தம் ஆணைக்கு உட்பட்டு நடப்பதாக உறுதி மொழி கூறிச் சென்றனர்.

## 11. அரசியாரின் சிக்கனமும் ஆரவாரமின்மையும்

அரசியார், பட்டத்திற்கு வந்த காலமுதல், பாராளு மன்றத்தாரின் தீர்மானப்படி அவர்க்கு ஆண்டொன்றிற்கு முந்நூற்றெண்பதினாயிரம் பவுன் கொடுக்கப்பட்டது. இதைத் தவிர அரசியார்க்கு வேறு வருவாய் கிடையாது. இவ்வருவாயைக் கொண்டே, அரசியார் தம்முடைய செலவுகள், படைகளின் செலவுகள் ஆகிய எல்லாவற்றையும் செய்துகொள்ளல் வேண்டும். அரசியார்க்கு வரவரக் குடும்பமும் செலவுகளும் மிகுந்துகொண்டே போன காலத்துங்கூடத் தமக்கு அவ்வருவாய் போதாதென்று ஒரு போதுங் குடிகளைக் கேட்டாரல்லர். இதனால் அரசியாரின் சிக்கனமும், பொறுமையும், தெளிந்த நோக்கமும் மிகவும் பாராட்டத் தக்கனவாயின! செல்வ மகளிர், தம் உடைகளுக்கோ, நகைகளுக்கோ எவ்வளவு பொருள் கொடுத்தாலும் போதாதென்றே சொல்லுவார்கள். இவர் தமக்கு வருவாய் மிகுதியாக வருமாயின், அதற்கு மிச்சமாகவே செலவு செய்வது காண்கின்றோம்.

ஐரோப்பாவிலுள்ள அரசர்கட்கும் பெருஞ் செல்வர்கட்கும் பாரிஸ் வணிகர் ஒருவர், விலைமிக்க அழகிய உடைகள் செய்து கொடுப்பது வழக்கமாயிருந்தது. அரசியார், பட்டத்திற்கு வந்த பிறகு, ஒருகால், முறை மன்றத்தில் இதுபற்றி அவ் வணிகர் பேச நேர்ந்த போது, "ஐரோப்பாவில் இதுகாறும் அரசாண்ட அரசர்களுக்குள்ளே என்னிடம் உடை செய்வித்துக் கொள்

ளாதவர் **விக்டோரியா** அரசியார் ஒருவர்தாம்" என்று சொன்னாராம். இதனால் அரசியார், பெருவிலையும் ஆர வாரமுமிக்க உடைகளிற் பணத்தைச் செலவுசெய்ய விருப்ப மில்லாதவரென்பது விளங்குகிறதன்றோ?

இன்னும், அரசியார்க்கு முடிசூட்டு விழா நடந்த பத்தொன்பதாம் ஆண்டில், அவர்தம் நிழலுரு (போட்டோ படம்) எடுக்கப்பட்டது. அப்போது, அவர் யாதொரு நகையும் அணிந்துகொள்ளாமல் எப்போதும் போல் உடை உடுத்துச் சென்றனர். படம் எடுப்போர், 'அரசஆடை அணிகலன்களோடு நிழலுரு எடுத்தால் நன்றாயிருக்குமே' என்றார்கள். 'வேண்டாம்; இப்போது எடுக்கப்படும் என் நிழலுரு குடிமக்கள் எல்லாரும் பார்க்கக்கூடிய தாகலான், அஃது எளிமையாக இருத்தலே நல்லது; அவர்கள் உடைக்கும், நகைக்கும் வீண் செலவு செய்வதைத் தவிர்க்க வேண்டுமென்பதே என் பெரு விருப்பமாகும்என்றார் அரசியார். பின், மிக எளிமையாக நம் பேரரசியாரின் நிகரற்ற நிழலுரு எடுக்கப்பட்டது.

"நம்மை ஆளுகின்ற அரசப் பெருமாட்டியே, இவ்வளவு எளிய முறையில் உடுத்தினரென்றால், 'நாம் ஏன் இத்துணைப் பெருஞ் சிறப்பாக ஆடை அணிகலன்கள் அணிய வேண்டும்?" என்று எண்ணும் ஓர் உயர்ந்த எண்ணம்,, அவரது நிழலுருவைக் காண்பார்க்கும் உண்டாகுமன்றோ? இத்தகைய நல்ல கருத்தைக் குடிமக்கட்கு நேரே சொல்லி உணர்த்த முடியாமையினாலேயே அரசியார் அதனைத்தம் படவாயிலாக அறிவித்தனர்.

இன்னுமொன்று இன்றியமையாதது. அரசியார் தம் தலையில் **கோணற்கோடு** எடாமல் **நேர்கோடு** எடுத்துச் சீவி முடித்திருப்பதை அவரது படத்திற்

பார்க்கலாம்; இவர் தம் பெண் குழந்தைகட் கெல்லாம் தலையில் நேரேயும், ஆண் குழந்தைகட்கு ஒரு பக்கம் சாய்த்தும் கோடு எடுத்திருப்பது வியப்பாக இருக்கிறது.

நாற்பதாண்டுகளாக, நம் இந்திய நாட்டுப் பெண் மக்கள், நேரே வகிர்ந்து தலையைச் சீவாமல் மேனாட்டு நாகரிகமென்று கோணற்கோடு எடுத்துச் சீவி முடிக் கின்றனர். உடைகள்கூட மேனாட்டவரைப்போல் உடுத்துவதால், 'நாம் நாகரிகத்தால் உயர்ந்தோம்'என்று இறுமாப்பு அடைகின்றனர். நம் அரசியாரே நேர்கோடு எடுத்தும் பகட்டில்லாத உடை உடுத்தும் நடந்தாராக லான், அவை மேனாட்டு நாகரிகமென்று கூறி நம்மவர் தலைதடுமாறி நடந்து பெருஞ் செலவிற்கும் அழகில் லாச் செயலுக்கும் உள்ளாவது நன்றாகுமா?.

இவ்விக்டோரியா அரசியார் காலத்தில், அந்நாட் டுப் பெண்மக்கள் உயர்தரக் கல்லூரிகளில் பயிலும் பழக்கம் இருந்ததில்லை. அவர்கள், வீட்டு வேலைகளை ஒழுங்காகப் பார்க்கவே கற்பிக்கப்பட்டனர். பின்னர், அவர்கள் கல்வி அறிவு வளர்ச்சியிலும் மேம்பட வேண்டுமென்று, அந்நாட்டு அறிவுடைய பெண்மக்க ளிற் சிலர், முன்னேறிவந்து பெரும்பாடுபட்டுக் கற் றுத் தேர்ந்தனர். அவர்கள் காட்டிய அரிய கல்வித் துறையில் பல்லாயிரக் கணக்கான பெண்மக்கள் முதிர்ந்து பேரறிவாளர்களாக விளங்கி வருகின்றார்கள். கல்வியின் வழிகாட்டிகளாகிய அந்நாட்டுப் பேரறிஞர் கள் தம் வாழ்க்கையில் எளிமையாகவேதான் இருந்து வந்தார்கள்.

நம் நாட்டில், மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன் னேயே, செய்யுளாசிரியர்களாகவும், அரசியலில் அமைச்

சர் போன்றும், அரச அவையிற் பேசும் பேராற்றல் வாய்ந்தவர்களாகவும் இருந்த ஔவையார், வெள்ளி வீதியார், ஆதிமந்தியார், காக்கைபாடினியார் முதலான தமிழ்ப் புலவர்பெண்மணிகள் யானறிந்த மட்டும் ஏறக்குறைய நூறுபேர் இருக்கின்றனரே! இவர்கள் இயற்றிய அருமையான பாடல்கள் புறநானூறு, அக நானூறு, குறுந்தொகை, முதலிய சங்க நூல்களில் வெள்ளிடை மலைபோல் காணக்கிடக்கின்றன. இதன் விரிவைப் 'பழந்தமிழ் மாதர்' என்னும் என் நூலிற் காணலாம்.' இப் பெருமாட்டிகளின் வழித் தோன்றல் களாகிய நம் பெண்மக்கள், இப்போது போதுமான கல்வி அறிவின்றி, எந்நாட்டினர் எவ்வெவ்வாறு உடுத்தினாலும், அவ்வப்படியெல்லாம் உடுத்தி வீண் ஆரவார வாழ்க்கையி விருப்பதை நினைக்க நினைக்க நெஞ்சம் பெரிதும் நைகின்றது! இவர்கள், வெளி ஆடம்பரங்களில் அறிவைச் செலுத்தாமல், நம் முன்னோரைப் போலவும், மேனாட்டு மாதரசி, புலவர் பெருமாட்டிகள் போன்றுங் கல்வித் துறையில் ஈடுபடு வார்களாயின், நம் நாடும் ஏனைய நாடுகள்போல் சிறப் புற்று விளங்குமன்றோ?

## 12. அரசியின் அரசாட்சி

அரசியார் முடி சூட்டப்பெற்று அரியணையில் அமர்ந்து அரசாட்சியை ஏற்ற முறைகளை இதுகாறும் சொன்னோம். இனி, அவர் அரசுசெலுத்தும் சிறந்த வழியைப்பற்றிச் சிறிது சொல்லுவோம்.

'நான் நல்லவளா யிருப்பேன்' என்று அரசியார், தம் சிறுமிக்காலத்திற சொன்னபடியே தம் அரசாட்சிக் காலத்திலுந் தவறாது நடப்பாராயினர். அரசியலில்

இவர், தாம் செய்யவேண்டிய கடமைகளினின்றுஞ் சிறிதுந் தவறார். அரசர்களிற் பலர், தமக்கு முன்னே வைக்கப்படும் கடிதங்களைப்பற்றி ஏதும் அறிந்து கொள்ளாமலே, அமைச்சர்கள் காட்டும் இடத்திற் கையெழுத்துப்போட்டுவிட்டுக் கவலையின்றிக் காலங் கழிப்பர். இத்தீய பழக்கம் அரசியாரிடத்தில் இருந்ததில்லை. அரசியற் காரியங்கள் ஒவ்வொன்றிலும், உள்நுழைந்து, ஒவ்வொரு செய்தியினையுந் தீரத் தெளிந்த பின்னரே, அரசியார், பத்திரங்கள், கடிதங்கள் முதலியவற்றிற் கையெழுத்திடுவார்.

ஒருகால், அரசியாரின் முதல் அமைச்சர் **மெல் போர்கன்** என்பார் 'பத்து அரசர்களுக்கு விடை சொல்லலாம்; ஆனால், இவ்வொரு அரசியார்க்கு விடை சொல்ல நம்மால் இயலாது போலிருக்கின்றது'. என்றாராம். அரசாட்சியின் துவக்கத்தில், ஒரு முறை, அமைச்சர் ஒருவர் அரசியாரிடம் வந்து அரசியே ! தங்கட்கு இச்செய்தியைப்பற்றி மனநிறைவு இல்லாவிடினும் நமக்கு இதனால் நலமுண்டு. நேரத்திற்குத் தக்கவாறு நடத்தல் தவறாகாது ; ஆகலான், தாங்கள் இதற்கு உடன்பட்டுக் கையெழுத்திடல் வேண்டும்' என்று கூறி ஒரு கடிதத்தைக் கொடுத்தார். அரசியார் அவரைப் பார்த்து மிக அமைதியாக, ஐயா ! எனக்குக் கற்பித்தவர்கள் நல்லது இது, தீயது இது என்று பகுத்தறிந்து எதனையும் முறைப்படி செய்தல் வேண்டுமென்று கற்பித்தார்கள். **நேரத்திற்குத் தக்கவாறு** என்ற சொற்றொடரைக் கேட்டதில்லை; ஆதலின் இஃது என் செவியிற் படவேண்டாம் என்று சொல்லி விட்டாராம். இன்னொரு சொல்லையும் அரசியார் கேட்க விரும்பவில்லை. அச்சொல் **தொல்லை** என்பது.

பின்னொருகால், அமைச்சர் ஒருவர், சில காரியங்களில் அரசியார்க்குத் தொல்லை உண்டாகாதபடி, ஏற்பாடு செய்வதாகக் கூறினர். அதற்கரசியார், தொல்லை என்கிற சொல்லையுஞ் சொல்லவேண்டா. காரியங்களைச் செய்யவேண்டுவது எவ்வாறென்றும், அவற்றை ஒழுங்காக முடிக்கும் வழி இன்னதென்றும் சொன்னாற் போதும் என்றார். அரசியார், தமது அரசாட்சியைப் பற்றிய பெரிய செய்திகளையெல்லாம் பெரும்பாலும் முன்னமே ஆராய்ந்து வைத்தார். அரசியற் காரியங்கள் ஒவ்வொன்றையும் உன்னித்து வந்தார். இவர் தமக்குச் சரி என்றும், முதன்மையானதென்றும் தோன்றுவது ஏதேனும் ஓர் ஏற்பாட்டைச் செய்யச் சொல்லி அமைச்சர்கள் சொன்னால், அரசியார் அதை நன்றாகக் கேட்டுத் தெளிந்த பின்னர்தான் செய்வார். இவர் எப்போதும் தளர்வின்றிக் காரியங்கள் செய்யும் உலையா முயற்சியுடையவர். அவர் சில காலங்களில், இரவில் நெடுநேரம் விழித்திருந்து வேலைபார்ப்பார். அப்படி இரவில் விழித்திருந்தாலும், சோம்பலின்றி விடியற்காலம் எழுந்து வேலைபார்ப்பார். இதைக் காணும் அவர் தம் ஆட்களும் பெருவியப் படைவார்கள் !

முடிசூட்டுங் காலத்தில், பழமையாக வரும் வழக்கப்படி தமக்கு இடப்பட்ட கடமைகளை, மற்ற அரசர்களைப் போல் அரசியார் அசட்டை செய்தாரல்லர். அப்போது முதற்குரு, அரசவாளை அரசியார்க்குத் தரும்போது 'எம் இறைவியே ! கடவுண் மேடைமீதிருந்து அவன் அடியவனாகிய யான் தரும் இவ்வாளை ஏற்றுக் கொள்வீராக ! இதனால், முறைசெய்து, தீமையை விலக்கி நல்லறம் புரிந்து, யாருமற்ற கைம்பெண்களையும், பெற்றோர்களை இழந்த பிள்ளைகளையுங் காத்தருள்

வீராக ; குற்றங்களை ஒறுத்து விலக்கி நல்ல செயல்களை நிலைநிறுத்துவீராக. இவற்றை ஒழுங்காகச் செய்வதால், இம்மையிற் பெரும் புகழ்பெற்றுக் கடவுளருள் பெறுவீராக !' என்று கூறிய பொன்மொழிகள், அரசியாரின் அரிய வாழ்க்கையில் கன்மேல் எழுத்துப்போல் அமைந்தன ! அரசியார், தம்முடைய இன்ப துன்பங்களைப் பொருட்படுத்தாது தமக்குள்ள கடமைகளைத் தளரவிடாமல் நிறைவேற்றுவதிலேயே கண்ணுங் கருத்துமாயிருந்தார். இவ்வாறு, தம் அரசியற் காரியங்களை மிகத் திறமையாக அறிந்து, அதனால், பல நன்மைகளைச் செய்துவந்தமையால் இவர், தமக்குமுன் அரசாண்ட அரசர்களால் இழக்கப்பட்ட குடிகளின் அன்பையும் நன்றியையும் பெறலாயினர்.

'அரசிக்கு என்ன வேலை யிருக்கின்றது ; அரசியற் காரியங்களெல்லாம் அமைச்சர்கள் செய்து விடுவார்கள்' என்று சிலர் சொல்வதுண்டு. அஃதுண்மையன்று. அரசியாரின் வேலைத் தொல்லையைக் காட்டுதற்கு ஒரு சான்று. ஆண்டொன்றிற்கு அரசியாரின் பார்வைக்கு அனுப்பப்படும் கடிதங்கள் முப்பதினாயிரமாகும் என்று குறிப்பிடப்பட்டிருக்கின்றது. ஆகவே, நாளொன்றிற்கு அரசியார் பார்க்கவேண்டியவை ஏறக்குறைய நூறுகடிதங்களாகின்றன; வருங் கடிதங்கள் விரிவாகவும முதன்மையாகவும் இருக்குமாகலான், அவற்றைச் செவ்வையாகஆராய்ந்து பார்த்தல் அரசியார்க்கு எளிதான காரியமன்று. இவ்வாறு அரசியார்க்கு, அரசக் காரியங்களை முடிப்பதில் பயிற்சி யிருந்தாலும், பல முறைகளில் அவற்றால் மனத்துன்பம் உண்டாதலும் உண்டு.

ஒருமுறை, அமைச்சரான **வெல்லிங்டன்** என்பார் கொலைக் குற்றத்திற்கு ஆளான ஒருவனுக்கு இட்ப்

பட்ட தீர்ப்புக் கடிதத்தைக் கொண்டுவந்து அதில் அர சியாரைக் கையெழுத்துப் போடுமாறு வேண்டினர். அப் போது அவர் இக்குற்றவாளிக்கு உதவியாகச் சொல்ல வேண்டியது ஏதும் இல்லையா ? என்று கேட்க, அவர் இல்லை என்றார். அரசியார் மறுபடியும் அப்படி யன்று; சிறிது நினைத்துப் பாருங்கள் என்றார். 'இவன் குற்ற வாளிதான்; ஆனால், இவனைப்பற்றி யாரோ ஒருவர் நன்மையாகச் சொல்லியிருப்பதாக நினைவு. அவன் ஏதாவது நன்மை செய்திருந்தாலும் இருக்கலாம்' என் றனர். உடனே அரசியார் மிக்க மகிழ்வோடு அத்தீர்ப்புக் கடிதத்தில்அவன்'மன்னிக்கப்பட்டார்'னென்றெழுதினர். இவர் தாம்செய்யும்ஒவ்வொரு காரியத்தையும் நன்காரா ய்ந்து செய்வாராகலான், அமைச்சர்களும், ஏனைத் தலை வர்களும், அலுவலாளர்களும் அரசி ஆணைக்கு மிகவும் அஞ்சி அன்போடு நடந்தார்கள் ! அரசியார், ஒரு சிறு போதும் வீண் போக்கமாட்டார். ஏதாயினும் ஒரு காரியத்தைச் செய்துகொண்டே யிருப்பர். இவர், தாம் 'தலை சீவி முடித்துக்கொள்ளும் போதுங்கூடச் சும்மா இருப்பதில்லை; ஒரு மாது அரசியார்க்குச் சீவி முடிக்கை யில், இன்னொருத்தி ஏதேனும் எடுத்துப் படிக்க அவர் கண்ணை மூடிக்கொண்டு கேட்டபடியே யிருப்பாராம்.

## 13. அரசியாரின் திருமணம்

விக்டோரியா அரசியார் முடிபுனைந்து அரசாண்டு வரும்போது, அவர்க்குத் திருமணக் காலம் நெருங்கிற்று. இது கண்ட அவர் அன்னையாரும் லியோபோல்ட் மாம னாரும், இன்னொரு மாமனாரின் மகனான **ஆல்பர்ட்** என் பார்க்கு அரசியாரை மணம் புரிவிக்க வேண்டுமென்று பெருவிருப்பங் கொண்டனர். அரசியார்க்கும் இவர்

பால் அன்புண்டு. ஆல்பர்ட்டும் இவரை வெகு நாட்க ளாக அன்பு பாராட்டிவந்தார்.

ஆல்பர்ட், அரசியாரின் மூத்த மாமனாரான **கோபர்க்** என்பாரின் இரண்டாம் புதல்வராவர். இவர் குழந்தையி லேயே சிறந்த அழகும், உயர்ந்த குணமும் உடையவர். இவர், ஐந்தாண்டினரா யிருக்கும்போதே, தந்தையுந் தாயும் ஒற்றுமையின்றிப் பிரிந்து போயினர். ஆகலான், இவர், தம் அன்னையாரை விட்டுப் பிரிந்திருக்க நேரிட் டது! இவ்வரசர்க்குத் தாயின் பாதுகாப்பு இல்லாமற் போனாலும், அவர் பாட்டியார் இருவர் இவரை மிக அன்போடு வளர்த்தனர். இவர் சிறு ஆண்டினரா யிருந்தபோதே, இவருக்கு விக்டோரியாவை மணம் பொருத்த வேண்டுமென்று இவர்களிருவரும் சிற்றப்ப னாரும் எண்ணியிருந்தனர். ஆகலான், அவர்கள் இவருக் குக் கல்வி கற்பிப்பதில் மிகக் கருத்தாயிருந்தனர். இவர்க்குக் கணக்கு, அரசியற் சட்டங்கள் முதலியவை களைத் தக்க ஆசிரியர்களைக் கொண்டு கற்பித்தார்கள்.

விக்டோரியா அரசியார் 1836-ஆம் ஆண்டில், ஆல்பர்ட் அரசரை இங்கிலாந்து அரண்மனையிற் காண நேர்ந்தது. அப்போதே, அரசியார் அவரை மணமக னாகக் கருதுமாறு வற்புறுத்தப்பட்டனர். அரசியாரும் அவர்கள் சொன்னதனை விருப்பமாகக் கேட்டாரேனும் 'மணத்திற்குரிய காலம் அவரிருவருக்கும் அஞ்ஞான்று நெருங்கவில்லை' என்று எண்ணினார்; அதுபற்றி மிகுந்த நினைவின்றி அரசியற் காரியங்களிலேயே மனம் பதியப்பெற்றார். அரசியார் உள்ளம் சில நேரங்களில் தம் அருமைக் காதலர்பாற் செல்லும்போதெல்லாம், 'நெஞ்சமே விரையற்க ; எம்மிருவர்க்கும் ஆண்டு மிகு தியாய் விடவில்லையே ; இன்னும் சில ஆண்டுகள் செல்

லட்டும்; அவர் ஆங்கில மொழியை நன்கு கற்றுக் கொள்ளட்டும்' என்பார். இக்கருத்தினையே தம் அருமை மாமனுர்க்கும் எழுதிவந்தார். சிறிது காலத்தில், அரசி யார், தம் காதலர்க்கு எழுதும் பொதுவான கடிதங்க ளைக்கூட நிறுத்திவிட்டார். இதுகண்ட ஆல்பர்ட்டின் சிற்றப்பனுரான லியோபோல்ட் அரசர் மறுபடியும், தம் அருமை மகனுர் ஆல்பர்ட்டை இங்கிலாந்திற்கு அனுப்பினுர். இவர் இப்போது, அரசியாரது உள்ளத் தைக் கவரத்தக்க பேரழகும், பேரறிவுமுடையவராய் விளங்கினுர். அரசியார் இம்முறை ஆல்பர்ட் அரசரைக் கண்டபோது தாம் முன் கொண்டிருந்த எண்ணமெல் லாம் மறைந்துபோயின. இவர், தம காதலர்மேல் அள விலா அன்புகொண்டார். அரசியாரும் ஆல்பர்ட்டும் தம் இருவரது மணத்தைப்பற்றிப் பேசித் தமக்குள் உறுதி செய்துகொண்டனர். பின்னர், அரசியார் இதுபற்றி எதிர் பார்த்துக்கொண் டிருக்கும் மாமனுர்க்குக் கடித மெழுதினுர். இவர், தாமே இந்தச்செய்தியை அரசியன் மன்றத்தில் கூச்சத்துடன் அமைச்சர்கட்குத் தெரி வித்தார்.

ஆல்பர்ட், அரசியார்க்கு மணமகனுகப் போவதை அறிந்து, அவர்கட்கு வேண்டும் சீர் சிறப்புக்களெல்லாம் செய்வதுபற்றி இருகுடும்பத்தாரும் பேசி முடித்தனர்.

1840-ஆம் ஆண்டில் ராயல் செயின்ட்ஜேம்ஸ் கோயிலில், பெருஞ் சிறப்புடன் அரசியார்க்கும் ஆல்பர்ட் அரசர்க்கும் திருமணம் நடந்தது! திருமணச் சடங்குகள் நடந்துகொண் டிருக்கும்போது, மண மக்களிருவரும், வாழ்க்கைப் படுமுன், குருமகனுர் அவர்களை நோக்கி, 'நீவிர், ஒருவரை ஒருவர் ஏற்றுக் கொள்கின்றீர்களா என்று கேட்பர். கேட்டுப்பின், மண

மகன் உறுதி கூறியதும், மணமகள், கடவுள் சான்ருகத் தான் கணவனிடத்துப் பேரன்புடையவளாய்ப் பிரி வின்றி அவர்க்குக் கீழ்ப்படிந்து நடப்பதாக உறுதி கூறுவாள். ஆனல், நம் அருமை அரசியார், பட்டம் ஆளும் பேரரசி ஆகலான், மற்றவருக்குக் கீழ்ப்படிந்து நடப்பதாகச் சொல்வது, அவர்தம் அரசநிலேக்குத் தகுமோ என்றெண்ணி, அரசியார் அவ்வாறு சொல் வதை விட்டுவிடலாமா? என்று அக்குரு கேட்டார். அதற்கு, உடனே 'யான் ஒரு பெண் என்ற முறையில் மணம் புரியப் போகிறேனே யன்றி, அரசி என்ற முறையில் அன்று; ஆகலான், எல்லாருக்கும் நடப்பது போல் எனக்கும் நடக்கவேண்டு மென்றார். இதனல், சிறிதேனும், தற்பெருமை என்பது அரசியாரிடத்து இருந்ததில்லே என்பது விளங்குதல் காண்க. இவர் திருமணத்தன்று சிறிது மழையுந் தூற்றலுமாக இருந் தது. என்றாலும், கணக்கில்லாத மக்கட்கூட்டம் அரசி யாரின் திருமணத்தைக் காண வந்து கூடிற்று. அன்று அவர் பன்னிரண்டு மணிக்கு, ஆயிரம்பொன் பெறுமான அழகிய மண உடை பூண்டு, மணக்கோலத்திற்குரிய மற்ற சிறந்த ஒப்பனைகளுடன் பதினெண் இசைக் கருவிகள் கடல்போல் முழங்க, அரசியார் தம் முடியில் மலர்மாலே அணிந்து தோழியர்கள், அமைச்சர்கள், தம் பெரிய அலுவலாளர்கள், உறவினர்கள் புடை சூழக், கோயிலுக்குள் சென்று ஆல்பர்ட் அரசரின் பக்கத்தே நின்றனர். சமயகுரு முன்சொன்ன முறைப்படி சடங்குகள்செய்ய, அரசியாரின் சிறிய தந்தையாரான சஸக்ஸ் என்னும் பெருமானரால் அளிக்கப்பட்டு, அரசியார் ஆல்பர்ட் அரசர்க்கு வாழ்க்கைப் பட்டார்.

அரசியார் திருமணத்தன்று இங்கிலாந்து முழுதும், பெருஞ் சிறப்பாக ஒப்பனை செய்யப்பட்டது. அன்று நாடகசாலைகளில் பணம் வாங்காமல் வேடிக்கைகள் காட்டப்பட்டன. ஏழை எளியவர்கட்கு உயர்ந்த உணவு கொடுக்கப்பட்டது. மற்றச் சிறப்புக்களெல்லாம் பெரிதல்ல. அன்று அரசியார், ஏழை எளிய மக்களுக்கு நல்ல உணவு கொடுத்து மகிழ வைத்ததுதான் பெரும் புண்ணியமும் சிறப்புமாகும். பொதுவாகச் சிலரைத் தவிரப் பெருஞ் செல்வர்கள் வீடுகளில், திருமணங்கள் நடக்குமாயின், வீண் ஆரவாரங்கட்குக் கணக்கில்லாமற் பணத்தை வாரி இறைத்துச் செலவழிக்கின்றனர்! நொண்டி, முடம், நோயாளிகள் தெருக்களின் ஓரமாய் நாள்முழுதும் வெயிலில் நின்று கூக்குர லிட்டாலும் மணவீட்டார் அவர்களை ஏறிட்டும் பாரார்! தாம் மகிழ்ச்சியோடு மணங்கூடு நாளில், ஏழை எளியவர்களும் நன்றாக உண்டு உடுத்துக் களிப்போடு இருக்க வேண்டுமென்று எண்ணிய அரசியாரது உள்ளக் கனிவு மிகவும் பாராட்டத் தக்கதே!

'காகத் திருகண்ணிற் கொன்றே மணிகலந் தாங்கிருவர்
ஆகத்துள் ஓருயிர் கண்டனம்'

என்று மாணிக்கவாசகப் பெரியார் திருச்சிற்றம்பலக் கோவையாரிற் கூறியபடி அரசியும் அரசரும் ஓருயிர் போல் மிக ஒற்றுமையாய்ப் பெரு மகிழ்வோடிருந்தனர்! ஆல்பர்ட் அரசர் அழகும் அறிவுமிக்க பேரிளைஞராயினும், அவர் மற்றைப் பெண்களை ஏறிட்டும் பாராத சிறந்த கற்புநெறி யுடையவரென்று அரசியார் கூறிப் பேருவகை எய்தினர்.

அரசியாரவர்கட்கு, ஆல்பர்ட் அரசர் சிறந்த குணமும், அறிவு நுட்பமும் வாய்ந்த காதலராய் அமைந்தார்.

ஆனால், அவர் பிறந்து வளர்ந்த நாடு **ஜர்மனி** ; அவர் மொழியும் வேறு. நாட்டுப் பழக்க வழக்கங்களும் மாறுபட்டவை ; அவர் ஆங்கிலச் சட்டங்களும் முறைகளும் மிகுதியாகத் தெரியாதவர். அரசியாரோ ஆங்கில மாது ; இவர் நாட்டை ஆளும் பெருந் திறன் அமையப் பெற்றதுமன்றி, சட்டங்களும் நன்றாகக் கற்றறிந்தவர். திருமணம் ஆனவுடன் இவர்கள் அன்பால் ஒன்றுபட்டனரேயன்றி, மற்ற அரசியற் காரியங்களில் வேறுபட்ட கருத்துடையவராயினர். இக்காரணம்பற்றி அரசியார்க்கும் அரசர்க்கும் சிலநேரங்களில் மனத்தொல்லை ஏற்படுவதுண்டு. ஒருகால், ஆல்பர்ட் அரசர் தம் மனைவியோடு பிணங்கிக்கொண்டு தம் அறையில் தனியே யிருந்து கதவைத் தாழ்ப்பாளிட்டுக் கொண்டார். இஃதறிந்த அரசியார் வந்து கதவைப் பல முறையுந் தட்டினார். அரசர், வாளா இருந்துவிட்டுப் பின் 'அங்கே யார் ?' என்று கேட்டார். அதற்கு 'இங்கிலாந்தின் அரசி' என்று விடை பகர்ந்தார். இதற்கும் அரசர் அசையாதிருப்பது கண்டு, மறுபடியும், அரசியார் கதவைத் தட்டினார். அரசர் சிறிது நேரம் பொறுத்து, 'யார் அங்கே ?' என்றார். 'தங்கள் மனைவி' என்றார் அரசியார். உடனே அரசர் எழுந்து கதவைத் திறந்து விட்டார்.

ஆண் மக்களுக்கு ஆண்மைக் குணமும், பெண் மக்களுக்கு அமைதிக் குணமும் எல்லா நாடுகளிலும் எல்லார்க்கும் ஒன்றுபோல ஆண்டவனருளால் இணைக்கப்பட்டிருக்கின்றன. 'தாம் அரசி ; தமக்கு அரசர் கீழ்ப்படிந்து கதவு திறத்தல் வேண்டுமென்பது அரசியார் கருத்தன்று ; ஏதோ சினத்தால் தம் கணவர் தனியே அறையில் இருப்பதால், அவர் நிலை எவ்வாறோ,

என்று ஐயுற்று, அரசி என்ற முறையிலாவது அவர் கதவைத் திறக்கட்டுமென்று நினைத்தார். ஆனால், அரசர் தம் மனைவி தம்மைக் குறைவாக எண்ணுகின்றாரென்று கருதித் தம் நிலையினின்றும் அசையாதிருந்தார். அறிவும் அன்புமிக்க அரசியார் தங் கணவர் கருத்தை அறிந்தாராய், இனி அவருள்ளம் வருந்தலாகாதென்று, அவர்பால் தம் அன்பு பெருகத் 'தங்கள் மனைவி' என்றார். உடனே அரசர் தம் அருமை மனைவியாரின் இனிய மன நிலையினை அறிந்து அளவிலா மகிழ்ச்சி யடைந்தார்.

'அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்'

என்ற வள்ளுவப் பெருமான்தன் பொய்யாமொழி இவ்வரசக் காதலரிருவர்க்கும் பொருந்துதல் காண்க.

ஒருகால், அரசர் தம் அரண்மனைத் தோட்டத்தின் குளத்தின்மேலுள்ள பனிக்கட்டிகளின்மீ தேறிப் போகையில், பனிக்கட்டி வெடித்து அதற்குள் விழுந்து விட்டார். நீந்துவதற்கும் வழியில்லை. அப்போது அரசியார் ஓடிவந்து, அவரைக் கைகொடுத்து வெளியேற்றினார். பக்கத்திலிருந்த மாது உதவிக்காகப் பெருங் கூக்குரலிட்டாள்! ஆட்கள் வரும்வரை அரசியார் காத்திருப்பரேல், அரசர் தண்ணீர்க்குள் அமிழ்ந்தி யிருப்பார். தண்ணீரில் விழுந்தவர்களை எடுக்கப்போகிறவர்கள், அவரருகே மிகக் கருத்தாகச் செல்வர். அரசியார் தம் உயிரையும் பொருட்படுத்தாமல், அரசர்க்குக் கை கொடுத்துத் தூக்கினமை, அவர் பேரன்பின் திறத்தை விளக்குகிறதன்றோ?

அரசியார், ஏதோ காரணத்தால் சில நாட்கள் தங் கணவரை விட்டுப் பிரிந்திருந்த காலத்தில் அவர் எழுதுவ

தாவது: 'எனக்குத் தனிமை விருப்பமில்லை; எத்தனையோ பெண்கள் தங் கணவரை விட்டுப் பிரிந்திருக்கின்றார்க ளென்பது எனக்குத் தெரியுமாயினும், எனக்கு மட்டும் அவ்வாறு பிரிந்திருப்பது முடியாதாகின்றது. அவர் இல் லாமையால் ஒன்றிலும் எனக்கு விருப்பமில்லை'; என்ப தாம். இதேபடியாக அரசரும், 'பேரன்பு நிறைந்த எம் இனிய இல்வாழ்க்கையைவிட இன்பந்தருவது வேறொன்றுமில்லை. எம் இருவர்தம் உயிரும் உள்ளமும் ஒன்றேயாய் அமையப் பெற்றோம். ஆகலான், வேறு பேறு பெறவேண்டுவதும் உண்டோ?' என்றெழுதினார்.

## 14. அரசியார்க்கு இடையூறுகள்

அரசியார்க்கு மணமான பிறகு, அரசியற் பகைவர் களால் பெருந் துன்பம் இழைக்கப்பட்டார். ஆண்டவ னருளால், பின்னர், அவை ஒழிந்தன. அரசியார்க்கு மண முடிந்த மறு ஆண்டில், இவருந் தங் கணவருமாகப் பகல் வேளையில் ஓரிடத்தில் போய்க் கொண்டிருந்த போது, **ஆக்ஸ்போர்ட்** என்பான், துப்பாக்கியால் அரசி யாரை நோக்கிச் சுட்டான். அக்குண்டு, சிறிது தப்பி அரசியாரின் செவியருகே அப்புறஞ் சென்றது! அரசி யாரும் அரசரும் 'ஈதென்ன?' என்று வெளியே பார்க்கை யில், அப்பையன்' இரண்டு துப்பாக்கிகளை இருகையி லும் ஏந்தி நிற்பதைக் கண்டார்கள். இவன், தான் சுட்ட குண்டு குறி தப்பினது கண்டு, ஒன்று போனால் இன்னொன்று இல்லையா? என்று இன்னொரு முறையுஞ் சுட்டான். உடனே அரசர், அரசியாரை உள்ளிழுத்துக் கொண்டு கதவை அடைத்து வண்டியை விரைந்து விடு மாறு செய்தார். அதனால் மற்றைக் குண்டும் குறிதப்பி யது! இச்செய்தியைக் கேட்ட குடிமக்கள் அனைவரும்

அரசியார்க்கு நேர்ந்த பெரிய இடருக்காகப் பெரிதும் வருந்தினார்கள். இவர் ஆண்டவனருளாற் காப்பாற்றப் பட்டதற்காகக் கோயில்களில் சிறப்பு வழிபாடுகள் செய்யப்பட்டன! அரசியற் றலைவர்களும், அலுவலாளர் களும் தங்களுடைய மகிழ்ச்சியை அரசியார்க்குத் தெரி வித்தார்கள். தம் அருமை அரசியாரைச் சுட்டவனை உடனே கொலைசெய்ய வேண்டுமென்று மக்களெல் லாரும் முயன்றனர். ஆனால், அரசியார், தீர ஆராய்ந்து பார்த்ததில், அவன் **பித்தன்** என்று முடிவு செய்யப் பட்டது. ஆகலான், அரசியார் அவனைப் பித்தாவிடுதி யில் வைக்குமாறு கட்டளையிட்டார். பின்னர், அவன் ஆஸ்திரேலியாவிற்கு அனுப்பப்பட்டான். இன்னொரு முறை, அரசியாரும் அவர் கணவருமாக இருவரும் வண்டியில் போகும்போது, முன்னவன் சுட்ட இடத்தி லிருந்து மற்றொருவனும் அரசியாரை நோக்கிச் சுட்டான். இப்போதும் இறைவனருளால் அக் குறியும் தப்பி ஓடினது! அரசியார் இதற்குந் தப்பிப் பிழைத்தார். அக்கொடியோன், முறை மன்றத்தில் வழக்கிடப்பட்டுக் **கொலை ஒறுப்பு** (தண்டனை) அடைந் தான். ஆயினும், அரசியாரின் பேரிரக்கத்தால் அவன் சாகும் வரையில் தண்ணீர் மேல் ஏற்றி நாடு கடத்தப் பட்டான். சில ஆண்டுகளுக்குப் பின்னும் இவ்வாறே இருவர் அரசியாரைக் கொல்ல முயன்றனர். கடவு ளருளால் அப்போதுங் காப்பாற்றப்பட்டார்! பாருங் கள்! ஏனைய அரசர்கள் தம்மைக் கொல்ல வந்தவர் களைக் கொலை செய்யாது விடுவரோ? இவ்வருமை மிக்க அரசியார், தம்மைக் கொல்ல வந்தவனுக்கும், அடிக்க வந்தவனுக்கும் சாவுந்தீர்ப்புக கொடாமல், அவர்களை மன்னித்து நாடு கடக்குமாறு செய்தார்!

இத்துணைப் பேரிரக்கம் அரசர்கட்கு வாய்த்தல் மிக அரிது! அரசியார், தமக்குப் பேரிடர்கள் ஏற்பட்ட காலங்களிலும் தம் மன உறுதியைக் கைவிட்டவரல்லர்.

## 15. மக்கட்பேறும் இல்வாழ்க்கையும்

இத்தனை இடையூறுகளும் நீங்கப் பெற்றுக் குறைவின்றி, அரசியார் தங் கணவருடன் மகிழ்ச்சியாக வாழும்போது, இவர்கட்குச் சிறந்த மக்கட்பேறும் ஆண்டவனருளால் உண்டாவதாயிற்று.

அரசியார்க்கு 1840-ஆம் ஆண்டில், நவம்பர் 21-ஆம் நாள் அழகும் அறிவும் மிக்க பெண்மகவு பிறந்தது! இவர்க்கு, இம்மகவு முதற் குழந்தை ஆகலான், இவர் பிறந்த நாளன்று, மகிழ்ச்சியின அறிகுறியாக நகர முழுதும் ஒப்பனை செய்யப்பட்டது! எங்கும் இசைக் கருவிகள் ஒலித்தன! பல இடங்களில் உவகைக் கூட்டங்களும் விருந்துகளும் நடைபெற்றன. அடுத்த ஆண்டு 1841 நவம்பர் 9-ஆம் நாள், பட்டத்திற்குரிய சிறந்த ஆண்மகவு பிறந்தது. நாடாளும் ஆண்மகவு அரசியார்க்குப் பிறந்தது கேட்டு, அந்நகர மக்கள் அடைந்த மகிழ்ச்சிக்கோர் அளவேயில்லை! 1843-ஆம் ஆண்டு அரசியார்க்கு **ஆலிஸ்** என்ற பெண்மகளாரும் பிறந்தார். இவர் பிறந்த சில திங்கள் கழித்து, ஆல்பர்ட் அரசர், 'என் குழந்தைகள் மூவரும், அறிவிலும் அழகிலும் ஓங்கி வளருகின்றார்கள்; பெரிய மகள் ஆங்கிலமும், பிரஞ்சும் நன்றாகப் பேசுகின்றாள். இரண்டாவது பிறந்த ஆண் குழந்தை முன்னைவிட இப்போது திறனாக இருக்கின்றது. ஆனால், இம்மூவரினும் மூன்றாங் குழவியே மிகச் சிறந்ததாகக் காணப்படுகின்றது' என்றெழுதினார். இதற்கிசையவே **ஆலிஸ்** அரசியார்

எல்லா மக்களினும் மிகச் சிறந்த அறமாதராய் விளங்கினர். இவ்வாறு அரசியார்க்குக் குழந்தைகள் அடுத்தடுத்துப் பிறந்தபடியால், அவர் அரசியற் காரியங்களை ஒழிவில்லாமற் பார்ப்பது ஏலாதாயிற்று. ஆனால், அவர் தங் கணவனார் ஆலபர்ட் அரசர், மணமான சில காலத்திற்குள் அரசியற் காரியங்களையுஞ் சட்டங்களையும் மிகத் திறமையுடன் நற்றறிந்தார். இக்கால முதல் இவர், அரசியார்க்குத் தனிப்பட்ட அமைச்சராக அமர்த்தப்பட்டார். இவரை அறிந்த ஒவ்வொருவரும், இவர் தம்மிடத்தில் மிக்க நேயமும் அன்புங்கொள்ளுமாறு நடந்துகொள்ளுவர். சில நேரங்களில், அமைச்சர்களால் சில இடையூறுகளும், மனத் துன்பங்களும் ஏற்படுவதுண்டு. அவற்றை இவர் தமது அமைதியான நல்ல இயற்கையினுற் பாராட்டாமலிருந்தார். அரசியலில் பெரிய மாற்றங்கள் ஏற்படினும் அவைகளால் தம் அருமை மனைவியார்க்குத் துன்பம் நேராவாறு, அவர் அதற்காவன பெருந்திறனுடன் செய்வர்! மணத்திற்கு முன் அரசியார்க்கு வேலை மிகுதி. அதன்பின், அரசியார் படித்துக் கையெழுத்திடவேண்டிய கடிதங்களை எல்லாம், ஆல்பர்ட் அரசர் விடியறகாலை ஆறு மணியிலிருந்து எட்டு மணிவரை படித்துக் கையெழுத்திடும்படி செய்வார். பின்னர், செய்தித் தாள்களைப் படித்துச் செய்திகளை அரசியாருந் தாமுங் காலை உணவு கொள்ளும்போது தெரிவிப்பார். இதோடு, தங் குடும்பக் காரியங்களையும் உன்னித்துக்கொள்வார். அரண்மனையில் நடந்த மிகுந்த செலவுகளையும் ஒருவாறு குறைத்தார். அரசியாரைப் போலவே, ஆல்பர்ட்டும், சிக்கனமும், எளிய வாழ்வில் விருப்பமும் உடையவர்.

அரசியார்க்கு 1844-ஆம் ஆண்டில், ஆல்பர்ட் எர்னஸ்ட் என்னும் ஆண்மகனார் பிறந்தார். 1846-இல், ஹெலினு என்னும் நான்காம் மகனும்; 1848-இல் லூயி என்னும் பெண் மகளும் பிறந்தனர். பிறகு இரண்டு குழந்தைகளும், கடைசியாக 1857-இல் ஒரு பெண் குழந்தையும் பிறந்தன. இவ்வாறு, அரசியார்க்குத் தொடர்ச்சியாக ஒன்பது அரிய குழந்தைகள் பிறந்தனர்.

'பெறுமவற்றுள் யாமறிவதில்லை அறிவறிந்த
மக்கட்பேறு அல்ல பிற'

என்ற குறள் மொழிப்படி பெறலரும் மக்களைப் பெற்று அரசியாரும், அரசரும் அடைந்த மகிழ்ச்சிக்கோர் அளவில்லை! இவர்களிருவர்க்கும், அரசியற் பொறுப்போடு குடும்பப் பொறையும் பெருகுவிதாயிற்று! மிகுந்த செல்வ நிலையில், தம் பிள்ளைகள் வளர்க்கப் படாமல், எல்லாத் துறைகளிலும் அவர்கள் சிறந்து வளர வேண்டுமென்று இருவரும் கருதினார்கள்.

## 16. குழந்தைகளை வளர்த்த முறை

அரசியார்க்கு, மற்றத் தாய்மார்களைப் போல், பிள்ளைகளைத் தாமே எடுத்து வளர்க்கப் போதுமான நேரமில்லை. ஆதலால், அவர்கட்குச் செவிலித்தாய்மார்கள் அமர்த்தப்பட்டனர். என்றாலும், அரசியார், தம் பெரு வேலைகளுக்கிடையே, தம் பிள்ளைகளின் பொறுப்பை விடாமல், அவர்களை உன்னித்து வந்தார். இவர் பால், இன்னொன்று வியக்கத்தக்கது.

அரசியார், தம் அருமைக் குழவிகட்குத் தம் பாலைக் கொடுத்து வளர்த்ததாகச் சொல்லப்படுகிறது. பெருஞ் செல்வர் வீடுகளில், ஒரு வேலையும் இல்லாமலிருக்குந் தாய்மார்கள், தம் இளங்குழவிகட்குப் பால் கொடுக்கச்

செவிலித் தாய்மார்களை வைக்கின்றனர். இவ்வாறு, இவர்கள் தம் குழவிகட்கும் பயன்படாமல், வீணாக உண்டு உறங்கிக் காலங் கழிக்கின்றனர். இப்படிப் பாழாக்குவதற்காகவா இப்பிறவி ஆண்டவனருளால் தரப்பட்டது? இல்லையே! பிறவியின் அறிவுஞ் செயலும் பெருகும்பொருட்டே அது நமக்குத் தரப்பட்டதாகுமென்பதை நம் செல்வ மாதர்கள் உணரும் வரையில், அவர்கள் அறியாமை யுடையராகவே கருதப்படுவர்.

இவர்கள் நிலைதான் இவ்வாறென்றால், மற்ற பெண்களிற் பலர், தம்முடைய பாலைக் கொடுப்பதால், உடல் வனமைகெடும், தொல்லை என்றெண்ணித் தம்மிடத்துள்ள அமிழ்தப் பாலைத் தம் பச்சிளங் குழவிகட்குக் கொடாமல், வற்றவைத்து விடுகின்றனர்! பேரிரக்கமுள்ள எல்லாம்வல்ல கடவுள், குழந்தை பிறந்தவுடன், அதற்கு உணவாகத் தாயுடலிற் புகுத்தித் தருந் தீம் பாலை அதற்குக் கொடாமல், அதனை அலற விடுகின்றனர்! ஐயகோ! இச்செயல் மிகக் கொடியது! இப்பசுங் குழவிகட்கு ஆவின்பால், மாஉணவுகள் கொடுப்பதால், அவை உடல்நிலை கெட்டு வயிற்றுப் போக்கும், பால் கட்டியும், காய்ச்சலும் உண்டாகி, மிக விரைவில் இறந்து போகின்றன! தாய்ப் பால் இல்லாமல் உடல் மெலிந்து வெளுத்த முகத்தோடும், தள்ளிய வயிறோடும் மகிழ்ச்சியின்றிக் காலங்கழிக்குங் குழந்தைகள் எத்தனை பேர்?

அன்பு மிக்க தாய் ஒருத்தி, தன் அருமைக் குழவி அழும்போது, அதனை எடுத்து மார்போடணைத்துப் பால் கொடுக்குங்கால், அக்குழவி எவ்வளவு அமைதியோடு ஆழ்ந்த இன்பத்திற் படிந்து உறங்குகின்றது! இவ்

வின்ப உறக்கம், புகட்டுப் பால் குடிக்கும் குழவிகட்கு உண்டா? இல்லையே! ஆண்டவனே, பிள்ளைகட்கெனஅமைக்குந் தீஞ்சுவைப் பாலை, அவன் கருத்துக்குமாறாக ஒளித்து வற்ற வைத்துத், தம் பாழான உடலுக்கு ஓய்வு தேடுங் கன்னெஞ்சத் தாய்மார்களை நினைக்குந்தோறுங் காணுந்தோறும் என் நெஞ்சம் பெரிதும் வருந்துகின்றது! கெட்ட நோயுடைய சில தாய்மாரைத் தவிர, ஏனையோர், தம் பாலை இளங் குழவிகட்கு ஓராண்டு வரை ஒளிக்கலாகாது. நம்மை ஆண்ட அரசியாரே தம் பெரு வேலைக்கிடையே தம குழந்தைகட்குத் தம் பால் கொடுத்து வளர்த்தாரென்றால், நாம எவ்வாறு வளர்த்தல் வேண்டும்?

அமெரிக்க நாட்டினர், குழந்தைகளின் உடல்நலக் கணக்கெடுத்தபோது, தாய்ப் பால் குடிக்குங் குழவிகள் நூற்றுக்குத் தொண்ணூறு நலமுடையனவாகவும், தாய்ப்பாலின்றிப் புகட்டுப் பால் குடிக்கும் பிள்ளைகள் நூற்றுக்குப் பத்து நலமுடையனவாகவும் இருப்பதாக எழுதி யிருக்கின்றார்கள். விக்டோரியா அரசியார், தமக்குச் சிறிது ஓய்வு கிடைத்தாலும், தம் மகவுகளைக் குளிப்பாட்டுவதும் உண்டு; இவர் உலகை ஆளும் ஒப்பற்ற உயர் நிலையிலிருந்தாலும, இல்வாழ்க்கைக்குரிய பெண்மைக் குணங்களிற் சிறிதுங் குறைந்தாரல்லர். எந்தெந்தக் கால நேரங்களில் யார் யாரிடம எவ்வெவ்வாறு பேசி நடக்கவேண்டுமோ அவ்வாறெல்லாம் நடந்துகொள்ளும் பெருந்திறனுடையவர். 'அரசியார் தம் அரச நிலைக்கு எவ்வளவு பொருத்த முடையவரோ, அதுபோலவே, அவர், ஓர் எளியவன் மனைவியைப் போலிருக்கவுந் தகுதி யுடையவ'ரென்று ஓர் அறிஞர் கூறினார்.

## 17. குழந்தைகட்குக் கல்வியயிற்றும் முறை

அரசியார் தம் பிள்ளைகளிடத்தில் மிக்க அன்பு பாராட்டி, அவர்களை மிகச் செல்வமாக வளர்த்தார். ஆயினும், அவர்கள் மனம்போல் நடக்க விட மாட்டார். இவர்கள் தம் ஆசிரியர்களுக்குக் கீழ்ப் படிந்து கல்வி பயிலுமாறு செய்தார். குழந்தைகள் ஆண்டவனை ஒழுங்காக வணங்கவும் கற்பிக்கப்பட்டனர். எல்லோ ரிடத்தும், அன்போடும், பணிவாகவும் பேசவேண்டு மென்று அரசியார் அவர்கட்கு அடிக்கடி அறிவுறுத்தி வந்தார்.

ஒரு நாள், அரண்மனையில் ஒரு வேலைக்காரி பல கணிகளுக்கு (சன்னல்) நிறங் குழைத்துத் தீட்டிக் கொண்டிருக்கையில், அரசியாருடைய மக்களில் இருவர் அவளிடமிருந்த தீட்டுக் குச்சியை வாங்கி அவளது முகத்தில் தேய்த்து விட்டார்கள். இச்செய்தியை அரசியார் அறிந்ததும், அவர், அவ்விருவரையும் அழைத் துக்கொண்டு போய் அவளிடம் மன்னிப்புக் கேட்கும் படி செய்தார்.

இன்னொரு முறை, அரசியார், படைகளின் ஒழுங் கைக் காணுமாறு சென்றபோது, அவருடன் அவர் தம் மகளாருஞ் சென்றார். அவர் உடன்வரும் ஆட்களோடு விளையாட்டாகத் தொல்லை பண்ணினார். அரசியார் சினந்துங் கேளாராய்த் தங் கைக்குட்டையைக் கீழே எறிந்து, அதனை எடுத்துத் தருமாறு அவ்வாட்களை ஏவினார். அது கண்ட அரசியார், வண்டியை நிறுத்தி 'நீயே வண்டியை விட்டிறங்கிப் போய் அதனை எடுத்து வா,' என்று கட்டளையிட்டார். இவர், கல்வி கற்பிக்கும் முறைகளிற் சில வேளைகளில் தம் மக்களிடத்து மிகக் கடுமையாயிருப்பாராம்.

மிக்க ஆரவாரமும் செல்வாக்கு நிறைந்த நகர அரண்மனையில் தம் பிள்ளைகள் வளர்வதைவிட மற்ற இடங்களிலிருந்து அவர்கள் உலக வருத்தங்களும், பழக்கங்களும் அறியவேண்டுமென்று அரசியாரும் அரசரும் விரும்பினார்கள். இங்கிலாந்தின் தென்கரையிலுள்ள **வைட்தீவில்** ஏற்றதோர் இல்லம் அமைத்தார். அதனைச் சூழத் தோட்டங்கள் அமைத்துக் கொடுக்கப்பட்டன. அவர்கள், தோட்டக்காரன் காட்டியபடி இரண்டு மணி நேரம் வேலை செய்து வந்தனர். இது மட்டுமன்றி, ஆண் மக்கள், தச்சு வேலை, கட்டிடங் கட்டல் முதலான வேலைகளிலும் பழகினர். பெண் மக்கள், உடற் பயிற்சிக்காகத் தோட்ட வேலை செய்தல், விளையாடல் கொடுக்கப்பட்ட தோடு அமையவில்லை. இவர்கள் சமையல் வேலைகளிலும் பழக வேண்டுமென்று சமையலறைகள் அவர்கட்குக் கொடுக்கப்பட்டன. அவைகளில், பெண் குழந்தைகள் வீட்டு உணவுப் பொருள்களை ஒழுங்காக வைக்கவும், உணவைச் சுவையாகச் சமைக்கவும் கற்பிக்கப்பட்டனர், இவர்கள் தாம் அருமையாகச் சமைத்த உணவுகளைத் தம் பெற்றோர்க்கு வைப்பர்; அவைகளை அவர்கள் அமிழ்தென உண்டு மகிழ்ந்தனர்!

**'அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்**
**சிறுகை அளாவிய கூழ்'**

என்று திருவள்ளுவர் கூறியபடி, குழந்தைகள் கையிட்ட உணவே, தாய் தந்தையர்க்குப் பெரு மகிழ்வு தருமாயின், அவர்கள், தம் அறிவாலும் அன்பாலுந் தம் அருமைக் கைகளால் அட்ட உணவு, அரசியார்க்கும் அரசர்க்கும் எத்துணை இன்பம் பயப்பதாயிருக்கும்!

ஒரு குறைவுமில்லா அரச வாழ்விலிருக்கும், தம் குழந்தைகளை அரசியார் சமையல் வேலையிற் பழக்கினு

றென்றால், நம் செல்வ மாதர்கள் சமைத்தற்றொழிலை இழிவாகக் கருதலாமா? பெண்கள் வீட்டு வேலை செய்யத் தெரியாமல், ஆண் மக்களைப் போல, படிப்பதும், பந்தாடுவதும் ஆங்கில நாகரிகமென்று கூறி, அப்படியே நடக்கும் இக்காலப் பெண்டிரை நாகரிகமுடையார், அறிவு மிக்காரென்று சொல்லவுங் கூடுமோ? ஆங்கில நாகரிகத்திற்கு அரசியாயமைந்த விக்டோரியா அரசியாரே தம் பெண் மக்களை, சமைத்தற்றொழில் வீட்டு வேலைகளிற் பழக்கினமையை உற்றுநோக்குவார், பெண்கள் வீட்டுவேலை தெரியாமல் ஆண் மக்களைப்போல் வளர்தல், ஆங்கில நாகரிகமென்று சொல்ல முந்துவரோ? கூறுமின்கள். அரசச் செல்வ நிலையிலிருந்த கோவலன் மனைவி **கண்ணகி** என்னும் தண்டமிழ்க் கற்பரசி, மதுரையில் தன் கணவன் கோவலனுக்கு உணவு சமைத்துப் பணிவோடு அவனுக்கு இட்டாள்! பெருஞ் செல்வ வணிகன் திருமகளாரான புனிதவதியார், கடும் பசியாற் களைத்து வந்த பெரியாருக்கு மாங்கனியோடு உணவு படைத்தார்.

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டதாகிய, **குறுந்தொகையில்** ஒரு தமிழ்ச் செல்வ மாதரசி, தன் மனையில், தன் 'மெல்லிய விரல்கள் சிவக்கவும், புகைபட்டிராத கண்கள் புகையாற் சூழவும், அவைகளைப் பொருட்படுத்தாமல், தான் இடுப்பிற் கட்டிய உயர்ந்தபட்டாடையில் அழுக்குப் படுவதையும் உன்னியாமல், அடுப்பிலிருந்த தயிர்க் குழம்பு பதங்கெடாமல் செய்து இறக்கினாள். அக்கறியுணவை அவள் அன்புமிக்க கணவன் 'மிக நன்றாயிருக்கின்றது' என்று உண்டபோது, அவ்வொப்பற்ற பெண்

மணியின் முகம் புன்சிரிப்பால் மலர்ந்தது! என்று ஒரு புலவர் பாடுகிறார். ஆகலான், நம் பழந்தமிழ்ச் செல்வ மாதர்கள் சமைத்தற் கல்வி, அறிவு நூற் கல்விகளில் வல்லவராய் விளங்கின இந்நாட்டில், இப்போதுள்ள செல்வ மாதர்கள் ஒன்றும் அறியாமலிருப்பது அழகோ? கூறுமின்கள்! இவர்கள் ஆங்கிலரைப் பின் பற்றுகிறோமென்று அறியாமற் கூறுவதோடு, அவர்களைப்போல் வீட்டுவேலை செய்யமாட்டோம்; கல்வி மட்டும் பயில்வோம் என்று கூறுவதும், அதற்கு அவர்களின் பெற்றோர்கள் இடந் தருவதும், விக்டோரியா அரசியாரின் கருத்தும் செயலும் அல்ல என்பதை நந் தமிழ்ச் செல்வ மாதர்கள் உற்று நோக்குவார்களாக! அரசியார் தம் பெண் மக்களைக் கல்வி பயிற்றுவித்ததோடு வீட்டுவேலை, சமையல் வேலைகளிலும் நன்கு பழக்கினமையும் பன்முறை நாம் கருத்திற் பதித்தல் வேண்டும்.

## 18. அரசியாரின் நாட்டுப்புற வாழ்க்கை

**ஆஸ்போர்ன்** அரண்மனை இவ்வளவு பொருத்த முடையதாயிருந்தும், அரசியாரின் கணவனுர்க்கு, இவ்வூர் நிலை ஒத்துக்கொள்ளவில்லை. அவரது நாட்டைப் போல், ஒரு மலை நாடு அவர் உடல் நிலைக்கு வேண்டியதாய் இருந்தது. **ஸ்காட்லாண்டிலுள்ள** காடுகள் மலைகள் சூழ்ந்த **பால்மொரால்** என்னும் நாட்டுப்புறத்தில், அரசியாரும் அவர் கணவரும் குழந்தைகளும், அரச வாழ்வில் ஓய்வு பெறும்பொருட்டு அடிக்கடி அங்கு வந்திருப்பது அவர்கட்கு மகிழ்வாயிருந்தது! இவ்வூரில் அமைக்கப்பட்ட இல்லம் மிகப் பெரியதன்று; அதில் சில அறைகளும், சிறு மேல் வீடும் உள. இக்கட்டி

டத்தைச் சூழ மரஞ்செடி கொடிகளும், அழகிய பூஞ் செடிகளும் இயற்கை அழகுடன் மிளிர்ந்தன! அம்மலைப் பக்கங்களிலுள்ள மலைக்குன்றுகளும், மலை அருவிகளும் இவ்வரச குடும்பத்தார்க்கு மிக்க களிப்பை உண்டு பண்ணின. அரசியற் காரியங்களாலும் மக்கள் செய்யும் பெரும் சிறப்புக்களாலும், அவர்கள் கூட்டத்தாலும் நெருங்கப்பட்டிருந்த அரசியார்க்கும் அரசர்க்கும் இயற் கைக் காட்சிகளாற் சூழப்பட்ட இவ்வினிய இடம் மிக ஏற்றதாயும் ஆறுதலாயுமிருந்தது! இங்கே அரசி யார்க்கு வேலை ஆட்களும் மிகுதியாயில்லை. ஒரு சமைய லாளும், காவலாளன் ஒருவனும, இரண்டு உதவி செய் யும் பெண்களுமே. இவர்களோடு தாமும் தம்மக்களுஞ் சேர்ந்து வீட்டுவேலைகளைச் செய்துவந்தனர்.

இவர் தம் இல்லத்தின் அருகே, சிறிது தொலைவி லுள்ள எளிய மக்களின் வீடுகளுக்குப் போய் முதியோர் களிடம் பேசிக்கொண்டிருப்பார். இவர்கட்கு வேண்டும் உதவிகளுஞ் செய்வார். ஏழைமக்கள், உதவியின்றி நோய்வாய்ப் பட்டிருந்தால், அவர்களை அடிக்கடி போய்ப் பார்த்து மருந்து கொடுத்து அவர்கட்கு வேண்டும் பிற உதவிகளும் செய்துவந்தார். இவர் தம் இல்லத்திற்குத் தொலைவிலுள்ள எளிய மக்களுக்கென மருந்துச்சாலை ஏற்படுத்தினர். இவர் தாமிருந்த இடங்களிலுள்ள மக் கள் எந்நிலையிலிருந்தாலும், அவரவர்கட்குத் தக்க நிலை யில் பல உதவிகளைச் செய்தார். இவர், தாம் செய்யும் எக்காரியமும் இழிவென்று நினைக்கமாட்டார். ஆண் மக்கள் பலர் சேர்ந்து முடிக்க முடியாத அரும்பெருங் காரியங்களையெலலாம் மிக நுட்பமாகவும், பெருந்திற னோடும் செய்து முடிக்கும் பேராற்றல் அரசியார்க்கு உண்டு. ஆனால் அவர்தம் பெண்மைக்குரிய உயர்ந்த

இயற்கைகளிற் சிறிதுங் குறைந்தாரல்லர். இவர் தங் கணவரிடத்துக் காதல் மிக்க மனைவியாகவும், புதல்வர் களிடத்து அன்புமிக்க தாயாகவும் இருந்துவந்தார்! பால்மொரால் நாட்டுப் புறங்களில் குழந்தைகள் கல்வி கற்குமாறு பள்ளிக்கூடங்கள் அமைத்தார்.

## 19. வெளியூர்ப் பயணங்கள்

1842இல், அரசியாருந் தங் கணவருமாகத் தமது அர சாட்சிக்குட்பட்ட ஸ்காட்லாந்து, ஐர்லாந்து, எடின் பரோ, பெல்ஜியம், இத்தலி முதலான சிறந்த நகரங்கட் கெல்லாஞ் சென்று, ஆங்காங்குள்ள நாட்டுச் சிறப்பு, மக்களின் பழக்கவழக்கங்கள் வேலைத்திறமைகள் முதலி யவற்றைக் கண்டு களித்தனர்.

1843 ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்களில், அரசியாரும் அரசருங் கப்பலேறி இங்கிலாந்தின்தென்பாகத்திலுள்ள இடங்களைப் பார்த்தனர். பின், அவர்கள் சௌதாம்டன் என்னுந் துறைமுகத்தில் இறங்கினபோது, மழை மிகுதியாய்ப் பெய்தமையால் இறங்குந் துறை ஈரமா யிருந்தது. அரசியாரை வரவேற்க அங்கு வந்திருந்த அவ்வூர்த் தலைவர்கள் தம் மேற்சட்டைகளை எடுத்து அந்நனைந்த இடத்தின்மேற் பரப்பி, அதன்மேற் காலில் ஈரம்படாமல் அரசியார் நடக்குமாறு செய்தனர்! பாருங் கள்; அந்நாட்டு மக்களின் அரச அன்பு எவ்வளவு வியக்கத் தக்கதாயிருக்கிறது! தம்மைக் காக்கும் அரசி யார் ஈரத்தில் நடப்பதுங்கூட அவர்கள் மனத்திற்கு இசையவில்லை! அரசியாரின்மேல் வைத்தபெரும்பற்றின் காரணமாக, அவர்கள் தம் உயர்ந்த மேற்சட்டைகளை உடனே கீழே விரித்த அவர்தம் உள்ள நெகிழ்ச்சி எத் துணைச் சிறந்த தாகின்றது! ஆண் பெண் என்னும்

பிறப்பின் பகுப்பால் மக்கள் தாழ்தலும் உயர்தலும் இல்லை. அவரவர் அறிவின் மேம்பாடு குறித்தே மக்கள் பெருநிலை எய்துகின்றனர். ஆண்மக னொருவன் அரு வருக்கத் தக்க கொடுங்கோன் மன்னனாயிருப்பின், அவ னுக்கு அரசியார்க்கு இட்ட வரவேற்பு நடக்குமா?

**' அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சங்**
**கடுத்தது காட்டும் முகம் '**

என்ற குறள் மொழிக் கிணங்க, அரசியாரது, உள்ளந் தூயதாகலான், அவர் மலர்ந்த முகத்தைக் கண்டார். எந்நாட்டினராயினும், எவ்வளவு ஆண்டிற் பெரியரா யினும் அவர்க்குக் கீழ்ப்படிந்து அவரை வணங்குவாரா யினர்.

இவ்வாறு அரசியாரும் அரசருமாகப் பலமுறை பல நாடு நகரங்களுக்குஞ் சென்று, ஆங்காங்குச் செய்ய வேண்டுங் காரியங்களைக் கருத்திற் பதித்து வந்தனர். இவர்க்குச் சென்ற இடமெல்லாஞ் சிறப்பே.

## 20. மக்கள் மூவர்க்குத் திருமணம் உறுதியாதல்

நம் அரசியார்க்கு நான்கு புதல்வர்களும், ஐந்து புதல்வியர்களும் உளரென்பது முன்னமே அறிந் தோம். அரசர் பெருமான் இருக்கும் போதே முதல் மூன்று மக்களுக்கும் திருமணம் உறுதியாய் விட்டபடியால், அரசியார்க்குக் குடும்பக் கவலை சிறிது குறைந்தது. இவர்தம் முதன் மகளார் 1858 ஜனவரி 25 ஆம் நாள், ப்ரஷ்ய அரசரின் புதல்வர்க்கு உறுதியாகி, அவர்களிருவர் திருமணம் இலண்டன் மாநகரில் பெருஞ் சிறப்பாக நடைபெற்றது! இத்திரு மகளார், தம் அருமைக் கணவனோடு ஊருக்குப்போக விடைபெறும்போது, 'யானும் என் குழந்தையும்

பிரிவாற்றாது கண்ணீர் வடித்து வருந்தினேம், என்று கூறினர். இம் மகளார், தங்கணவருடன் ப்ரஷ்யாவிற்குப் புறப்பட்டுப் போகுங் காட்சியைக் காணும்பொருட்டுக் கூடியிருந்த பெருங் கூட்டத்திடையே, அவர் செலலும் போது, தம் அருமைப் பெற்றோர், உடன்பிறந்தார்களது பிரிவினுல், அவர் முகம் வாடி வருத்தத்தோடிருந்தது! அப்போது அவரை மகிழ்வித்தற் பொருட்டு ஒருவர், ‘அம்மையே! நுங் கணவனுரவர்கள் தங்களை அன்பாக நடத்தாவிடில் இங்கு வந்து விடுங்கள்,’ என்றார். அதற்கவர் உடனே சிரித்துவிட்டாராம்.

பெண்கள் திருமணமாகித் தம்பெற்றோரைவிட்டுப் பிரிந்து போகையில், கண்ணீர்விட்டு வருந்துவது, ‘இக் கால நாகரிகமன்று; பண்டைக்கால அறியாச் செயல்’ என்று சிலர் கூறுகின்றனர் உள்ளக்கனிவும், பேரன்புமுடையார், எந்நாட்டில் எக்காலத் திருந்தாலும், தம் மவரைவிட்டுப் பிரியும்போது, உளங் குழைந்து கண்ணீர் விடுவது இயற்கை தானே! வன்னெஞ்சத்தோடிருப்பதும் நாகரிகமோ? அரசியாரின் பெண்மக்கள் அனைவரும் தம் அன்னையார்போல் பெண்களுக்குரிய சிறந்த குணங்கள் அமையப் பெற்றவர்களே யாவர்.

## 21. ஆல்பர்ட் அரசரின் இறப்பு

அரசியார், தம்இன்னுயிர்க் கணவரோடும், அருமை மக்களோடும் எல்லாச் செல்வங்களும் நிரம்பப் பெற்று மிக மகிழ்வாக ஏறக்குறைய இருபது ஆண்டுகள் வாழ்ந்தார். வாழ்க்கையில் எத்தகையார்க்கும் இன்ப துன்பங்கள் கலந்து இருப்பதைத்தான் காண்கின்றோம்.

இப்போது, 1861 இல் அரசியார்க்குக் குடும்பத்தில் துன்பம் துவங்குகிறது. இவர்தம் அன்னையார் கென்ட்பெருமாட்டி நெடுநாள் நோயாயிருந்து 1861ஆம் ஆண்டில் இறைவனடி சேர்ந்தார். தம் அன்பிற்கினிய தாயின் இறப்பால் அரசியார் பெரிதுந் துன்புற்றார்! இதே ஆண்டில், இவர்தம் ஆருயிர்க் கணவனார் ஆல்பர்ட் அரசரவர்கள் கடுமையான காயச்சல் நோயாற் பற்றப் பட்டுப் பதினைந்து நாட்களுக்குமேல் படுக்கையிலிருந்தார். சிறந்த மருத்துவர்களைக் கொண்டு, நல்ல மருந்துகள் கொடுத்தும் நலப்படாமல் 1861 டிசம்பர் 14 ஆம் நாள் அரசியாரும் குழந்தைகளும் அலறி அழுமாறு இவ்வுலக வாழ்வு நீத்தார்! அரசர் இறக்கும் வரை, அவர் நலமடைவாரென்றே அரசியார் எண்ணி யிருந்தபடியால், கணவனாரின் இறப்பு அவர்க்கு அளவிலாத துன்பத்தைத் தந்தது! என்றாலும், அவர்தம் மூன்றும் மகளார் **ஆலிஸ்** என்பார், தம் அருமை அன்னையார்க்கு ஆறுதலளித்துப் பேருதவியா யிருந்தார். அரசியார்க்கு நேர்ந்த இக்கொடுந் துயரத்திற்காக அவர்தம் குடிமக்கள் உளம்நைந்து பெரிதும் வருந்தினார்கள்! மேலோரிலிருந்து கீழோர் வரை ஆறுதல் கடிதங்கள் அரசியார்க்கு அனுப்பினார்கள்!

## 22. அரசியாரின் கைம்மைக் காலம்

அரசியார்க்குத் தம் கணவரை இழக்கும்போது நாற்பதாவதாண்டு ஆகும். இவர், தங் கணவனார் இறப்பிற்குப் பின், எளிய கறுப்பு உடை அணிந்து கவலையுற்றவராய், வெளி நிகழ்ச்சிகளில் ஈடுபடாமல், அரசியல் காரியங்களை மட்டுஞ் செய்து வந்தார்! அரசியற் றலைவர்கள், தாம் தெரிவிக்க வேண்டுவனவற்றை **ஆலிஸ்** மகளார் வழியா

கவே அரசியார்க்கு அறிவித்தனர். 1866 ஆம் ஆண்டில் தான் பார்லிமென்ட் பேரவையை நேரே சென்று அரசியார் துவக்கினார்; இங்குச் சென்றபோது, சிறந்த அரசியல் உடைகளை அணியாமல், அவைகளை அரியணையிலே வைக்குமாறு கூறினார்; கறுப்புடையோடு தான் அரசவையிற் பேசினார்!

## 23. குடும்பத்தில் இன்பமுந் துன்பமும்

அரசியாரின் மூத்த புதல்வராகிய எட்வர்ட் என்னும் இளவரசர், டென்மார்க் அரசர் புதல்வியாரான அலெக்சாண்டிரியா என்பாரை மணம் புரிந்தார்! இவர்களின் முதல் மகனாரான ஆல்பர்ட் விக்டர் என்பார் 1890ஆம் ஆண்டு இந்தியாவிற்கு வந்து, முதன்மையான இடங்களெல்லாம் பார்த்துச் சென்றார்! சென்ற இரண்டாண்டில், இவர் நோய்வாய்ப்பட்டுத் திடீரெனத் தம் இருபத்தொன்பதாவ தாண்டில் இறந்தார். இவர்க்குப் பிரின்ஸஸ் மே என்னும் அரச மகளாரைத் திருமணஞ் செய்ய உறுதிப்படுத்தப்பட்டிருந்த படியால், இவர் இறப்பு அரச குடும்பத்தார்க்கும் குடி மக்களுக்கும் ஆறாத் துயரம் விளைத்தது!

பிறகு மகிழ்வான செய்தி அரசியாரின் இரண்டாம் புதல்வியாரான ஆலிஸ் பெருமாட்டி ஹெஸி நாட்டுச் செல்வரை மணந்ததுதான். இவர் மிகச் சிறந்த நல்ல இயல்புகள் நிரம்பப் பெற்றவர். அறநினைவு மிகுதியாயுடையவர். இவர் வரலாறு பின் எழுதப்படும். இவர், தம் கணவரையும், ஐந்து குழந்தைகளையும், ஆண்டு மிகக அன்னையாரையும் விட்டு 1878 இல் இம்மண்ணுலக வாழ்வைத் துறந்தார்!

அரசியாரின், மற்ற ஐந்து மக்களுந் தக்கவர்களுக்கு வாழ்க்கைப் படுத்தப்பட்டனர்.

பின்னர், அரசியாரவர்களின், நான்காம் புதல்வர் 1884 ஆம் ஆண்டில், தம் அருமை மனைவியையும், இரண்டு குழந்தைகளையும் விட்டு உயிர்நீங்கினுர்! இவர், தம் தந்தையாரைப் போல், உருவமும் உடல் நிலையும் உடையவராகலான், அரசியார்க்கு இவரிடம் அளவிறந்த பற்று. இப்புதல்வரது இறப்பு ஆண்டு மிக்க அன்னையார்க்குப் பெருந் துன்பத்தை விளைத்தது! இதனுல் இவரது உடல்நிலை மிகவுந் தளர்வுற்றது! இது மட்டுமா? இவர்தம் கடைசிப் புதல்வியாரான **பியட்ரிஸ்** என்பார், தம் உடன் பிறந்தாரனைவரும் தம் அன்னையாருடனிருந்து உதவி செய்ய இயலாமல் வேற்று நாடுகளிலிருந்தமையின், தாமாயினும், தம் அருமை அன்னையார்க்கு ஆண்டு மிக்க காலத்தில் உதவியாக அருகிருக்க வேண்டுமென்று தம் இருபத்தெட்டாவது ஆண்டுவரை மணஞ்செய்து கொள்ளாமலிருந்தார். இவர் அன்னையாரிடத்து வைத்த அளவிலா அன்பைக் குறித்து **டெனிசன்** என்னும் மாபெருஞ் செய்யுட் புலவர் மிக அழகாகப் பாடியுள்ளார். பின்னர், அரசியாரின் விருப்பத்திற்கிணங்கி **பியட்ரிஸ்** அம்மையார், '**பாட்டன்பர்க்** இளவரசராகிய **ஹென்ரி** என்பாரை மணந்தார். இவர்களிருவரும் அரசியாரை விட்டுப் பிரியாமலே இருந்து வந்தனர்.

ஐயகோ! இவ்விருவர்தம் இனிய வாழ்க்கையில், பொல்லாக் கூற்றுவன் பொறுமை கொள்வானுயினன்! 1896ஆம் ஆண்டு **பியட்ரிஸ்** பெருமாட்டியின் ஆருயிர்க் கணவனுர் இம்மண்ணுலக வாழ்வை நீத்தார்! தந் நலம் வெறுத்துத் தம அன்னையார்க்கு உறுதுணையாக நெடுங்காலம் மணஞ்செய்து கொள்ளாதிருந்த அத்திருமகளார்க்கு இத்தகைய துன்பம் பொறுக் கொணு த

யிற்று! அரசியார், தமக்கு அன்பாயும் பேருதவியாயு மிருந்த தம் அரிய மகளார், தம் இன்னுயிரனைய கணவனை இழந்து துன்புறும் நிலையை நினைத்து நினைத்துப் பெரிதும் புண்பட்டார்!

தளர்ச்சி மிக்க காலத்தில் அரசியார்க்குக் குடும்பத்தில் இறப்புத் துன்பங்களும் நேர்ந்தன! ஆகலான் அவரது உடல்நிலை மேலும்மேலுங் கெடுவதாயிற்று! என்றாலும், அவர் தம் மன ஊக்கத்தை விடாமல், தம் அரசாட்சியில் வேண்டப்படும் நன்மைகளை யெல்லாங் கூடுமானவரை உன்னித்து வேண்டுவன செய்து வந்தார்.

## 24. அரசியாரின் ஆளுகையில் நன்மைகள்

விக்டோரியா அரசியார் பட்டத்திற்கு வந்த ஆண்டிலேயே இருப்புப்பாதைகள் எங்கும் போடப்பட்டுப் புகைவண்டிகள் ஓட்டப்பட்டன. இந்நீராவிப் பொறிகளால் பல வசதியான போக்குவரவுகள் மக்களுக்கு ஏற்பட்டன. இதற்கடுத்தபடியாக 1839-ஆம் ஆண்டில், கடிதநிலையங்களும் அவற்றின் தொடர்பான ஏனைய நிலையங்களும் உலகமெங்கணும் நிறுவப்பட்டன. இவைகளால் மக்கள் அடைந்துவரும் நன்மைக்கோர் அளவில்லை! அரசியாரின் காலத்தில் பேரறிஞர் பலர் வெளிவந்தனர். மின்சாரத்தினால் வியத்தகு நுட்பமான முறைகள் பல கண்டுபிடிக்கப்பட்டுப் பயன்படுத்தப் பட்டன. இவர் காலத்தில், பெண்மக்களின் கல்வி மிகக் குறைவு. பின்னர், அரசியாரின் ஊக்கத்தை உதவியாகக் கொண்டு, மகளிர்க்கும் ஆண்மக்களுக்கும், பல படியான பள்ளிக்கூடங்களும், கல்லூரிகளும் ஆயிரக்கணக்காக உலகமெங்கணும் ஏற்படுத்தப்பட்டன.

இக்காலத்திலிருந்துதான் தீக்குச்சி செய்யுந் தொழிற சாலையும், இன்னும் பலவகைப்பட்ட தொழிற்சாலை களும் ஆங்காங்குத் திறக்கப்பட்டு மேம்பாடடைந்தன. நாடு நகரங்களில் தெருக்களும் வழிகளுந் துப்புரவாக இருத்தற் பொருட்டு நகராண்மைக் கழகங்கள் அரசி யாரின் ஆணையால் ஏற்படுத்தப்பட்டன.

புலவர்களிடமும் அரசியார்க்கு மிகுந்த மதிப் புண்டு. அவர்களியற்றும் நூல்களையும், செய்யுட்களை யும் படித்து மகிழ்வார். இவர், **டெனிசன், எலிசபெத் பேரெட் பிரௌநிங், டிக்கன்ஸ்** முதலான மாபெருஞ் செய்யுளாசிரியர்களால் புகழ்ந்து பாடப்பட்டனர்.

உலகத்தை ஆளுந்திறன், உள்ளபடியே இறை விக்கு அமைந்ததாகலான், அவ்விறைவியின் தொழி லையே நம் விக்டோரியா அரசியார் மேற்கொண்டு அர சாட்சியை நடத்தியது அவர் நிலைக்குப் பொருந்துவதே யாகும்.

## 25. அரசியாரின் முடிவு

விக்டோரியா அரசியார் அவர்கள், குழவிக் காலத் திருந்தே உணவு ஒழுங்காகக் கொடுக்கப்பட்டு வளர்ந்தா ரென்பது முன்னமே அறிந்தோம். அவர் அக்காலத்தி லிருந்தே தம் வாழ்நாள் முழுதும் மிகுதியாக நோய் வாய்ப்பட்டதில்லை. அரசியார், எல்லாத் துறைகளிலும், செவ்வையாக உழைக்கத்தக்க உடல்நலமும், உள்ளச் செம்மையும், பேரறிவும் ஆண்டவனருளால் அமையப் பெற்றார்.

இவருக்கு ஆண்டுமிகுந்த காலத்திற்றான் குடும்பத் தில் இறப்புத் துன்பங்களும் நேர்ந்தன. நெடுநாள் நோயினால் வருந்திக்கொண்டிருந்த அரசியாரின் இரண்

டாம் மகனார் 1900-ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் 30-ஆம் நாள் இறந்தார்! இன்னும், இவர்தம் அருமையான பேரன் கிறித்தியன் விக்டர் என்பாரும் காய்ச்சலினால் இறந்தார்! இத்துன்பங்கள் போதாமல், அரசியார்க்கு நீண்ட காலமாகப் பணி செய்துவந்த மாதரார் ஒருவரும் காலஞ்சென்றார்! இன்னும், தென் ஆப்பிரிக்காவில் சண்டை முடிவடையாமல் நீடித்தது! இவ்வளவுஞ் சேர்ந்து அரசியார்க்குச் சொல்லொணாத் துன்பத்தை விளைத்தது! அவர் உடல்நிலையும் நாளுக்கு நாள் குறைந்துகொண்டே வந்தது; உடலும் இளைத்தது; உணவும் மிகச் சுருங்கியது. இவர் இறப்பதற்குச் சில நாட்களுக்கு முன், ராபர்ட்ஸ் என்பாரோடு ஆப்பிரிக்காச் சண்டையைப்பற்றி மிகவருந்திப் பேசினார். அவர் இரண்டாம் முறை அரசியாரைப் பார்த்தபோது அவர் நிலை மிகவும் மாறியிருப்பது கண்டார். அவர் நலமில்லாச் செய்தி, 1901-ஆம ஆண்டு ஜனவரிமீ 18-ஆம் நாள் எல்லா நாடு நகரங்களிலுமுள்ள குடிமக்க ளெல்லார்க்குந் தெரிவிக்கப்பட்டது. அரசியார் மூன்று நாள் மிக்க இளைப்போடு படுக்கையிலிருந்து, ஜனவரிமீ 22-ஆம் நாள் சாயங்காலம் ஆறரைமணிக்குத் தம் மக்கள், பேரப்பிள்ளைகள், அரசியற் றலைவர்கள், குரு, முதலானவர்கள் சூழ்ந்திருந்து வருந்த, இம்மண்ணுலக அரசாட்சியைத் துறந்து விண்ணுலகை அடைந்தனர்.

அரசியார் இறந்த செய்தி உலகமெங்கணும் அறிவிக்கப்பட்டது. இவர் ஒவ்வொரு வகுப்பாருக்கும் வேறுபாடின்றி, அவரவர்க்கு வேண்டும் நன்மைகளைக் கரவின்றி அன்போடு செய்துவந்தமையின் இவர் இறப்பிற்காக, ஒவ்வொருவரும் தனிப்பட்ட நிலையில் மிகவும் வருந்தினார்கள். விக்டோரியாவிற்கு முன் அரசாண்ட

அரசர்கள் எவரையும் உலகமெல்லாம் இவ்வாறு கொண்டாடியதில்லை. '**பெண்புத்தி பின்புத்தி**' என்று ஆண் மக்கள் சிலர், அறியாமற் கூறிச் செருக்குறுவர். அரசியாரின் அறிவாற்றல் செயல்களுக்கு ஓர் எள்ளள வேனும் ஒப்புக்காட்ட எவரேனும் வல்லராவரோ!

'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்ற அறிவுத் தெய்வமாகிய ஔவைப் பிராட்டியாரின் பொன்னுரையைக் கற்றவர்கள், மேற்கூறிய இழிசொற்றொடரை எள்ளி நகையாடி விடற்பாலரன்றோ?

ஏனைய அரசர்கள்போ லல்லாமல், இம்மண்ணுலகு முழுதுந் தன் ஆணைக்குட்படுத்தி, மிகவும் திறமையுடன் அரசாண்ட நம விக்டோரியா அரசியாரது வாழ்க்கை-வரலாறு, நம் பெண்மக்களுக்கும் ஆண்மக்களுக்கும் சிறந்த வழிகாட்டியா யமைந்தமையின், இதனை ஒவ்வொருவரும் படித்து இனிது வாழ எல்லாம்வல்ல இறைவனை வேண்டுகின்றேன்.

இனி, இவ்வரசியார் காலத்திருந்த பெரும் புகழ் பெற்ற **ராபர்ட் ப்ரௌநிங்** என்னும் செய்யுளாசிரியரைப்பற்றி எழுதுவாம்.

# உ. எலிசபெத் பாரெட் பிரௌநிங்

## 1. தோற்றுவாய்

எலிசபெத் என்னும் ஆங்கில மாதரார், 1809-ஆம் ஆண்டு, இங்கிலாந்தின் வடபாகத்திலுள்ள ஹேர்போர்டு என்னும் நாட்டின் பகுதியாகிய, லெட்பரி என்னும் ஊருக்கருகேயுள்ள ஹோப் என்ட் என்னுமிடத்தில் பிறந்தார். இவர் தந்தையாரின் பெயர் எட்வர்ட் பாரெட் என்பதாகும். இவர்க்கு எலிசபெத் முதல் மகளாராவர். இவர்தம் உடன்பிறந்தார், ஆண்மக்கள் எண்மரும், பெண்கள் இருவருமாவர். இவர் பிறந்து வளர்ந்த இடம், மரஞ் செடி கொடிகளால் சூழப்பெற்றது. இவர்க்குப் பூஞ்செடிகளை வளர்ப்பதிலும், அவைகளிலுள்ள பல்வகை நிறப் பூக்களைப் பறித்து விளையாடுவதிலும் மிகுந்த விருப்பம். இவர், பூம்பந்தர்களினடியில் அடிக்கடி போய் உலாவிவருவார்.

## 2. சிறுமிக்காலம்

எலிசபெத், தம் சிறு வயது முதல் கல்விகற்பதில் பெருங் கருத்துடையவராய் விளங்கினர். இவர் எட்டாண்டினரா யிருக்கும்போதே, கிரீக் மொழியில் ஹோமர் எழுதிய செய்யுட்களைப் படித்தறிந்தார். நாளடைவில் பல அறிவு நூல்களையும், செய்யுட்டொகுதிகளையும் இடைவிடாது பயின்று வந்தார். ஆகலான், இவர், தம் பதினோராவதாண்டிலேயே சிறந்த கருத்துக்களடங்கிய பாக்கள் அமைக்குந் திறன் ஆண்டவனருளால் வாய்க்கப் பெற்றார்.

ஒருகால் இவர், பசும்புல்தரைமீது அழகிய பூக்களைப் பரப்பி, ஆண்மகனைப்போல் ஓர் உருவஞ் செய்தார்;

செய்து அதில், கண்களுக்கு நீலமலர்களையும், தலைப் பாகைக்கு மஞ்சள்நிறப் பூக்களையும் வைத்தார். இவ் வடிவத்திற்கு எக்டர் என்னும் பெயர் இட்டார். இவன் **டிராய்** என்னும் நகரத்தில் நடந்த பெரும் போரில் வெற்றிஅடைந்த போர் மறவன். இவர் மலரால் செய்த அவ்வாடவன் உருவம், எக்டரே உயிர்பெற்றெழுந்தது போலிருக்கிற தென்று அவர் அஞ்சுவாராம். இவர், தம் பன்னிரண்டாவதாண்டில் 'மாரதானின் ஆண்டகைச் செயல' என்பதுபற்றி, நான்கு இயல்கள் கொண்ட ஒரு புத்தகம் எழுதி முடித்தார். இச்செய்யுட்கள் மிக நன்றா யிருப்பதைக் கண்டு, அவர் தந்தையார், அவற்றையெல் லாம் ஒருங்குசேர்த்து அச்சிட்டார். எலிசபெத் எந்நேர மும் படிப்பதும் எழுதுவதுமாயிருப்பார். இவர், தம் அரு மைத் தம்பி, **கிரீக் இலத்தீன்** பயிலும்போது, தாமுங் கூடப் படித்து, அம்மொழிகளிலும் நன்றாகத் தேர்ச்சி பெற்றார். இவர், இவ்வாறு படிப்பதிற் கருத்தாயிருப் பது, இவர் பாட்டியார்க்கு விருப்பமில்லை. அக்காலத் தில், ஆங்கிலநாட்டில் பெண்கல்வி மிகக் குறைவாயிருந் தது. எலிசபெத் கல்வி கற்பதைவிடப் பூவேலையும் தையல் வேலையும் நன்றாகச் செய்யக் கற்றுக்கொண் டால் மிகவும் நல்லது என்றாராம். ஆனால், எலிசபெத் தின் தந்தையார், தம்மகள் கல்விகற்பதை மேன்மேலும் பெருக்க வேண்டுமென்று பேராவல் கொண்டார்.

## 3. அம்மையார்க்கு இடையூறு

இவர், தம் வீட்டைச் சூழ இருக்குங் குன்றுகளின் மீது குதிரைமேற் செல்வது வழக்கம். ஒருநாள், இவர், தங் குதிரைக்குத் தாமே கடிவாளங்கட்ட முயன்ற போது, எப்படியோ அச்சேணம் நழுவி, அவர் முதுகின்

மேல் விழுந்து விட்டது. அதனால் அவர்க்கு முதுகில் கடுமையான காயம் ஏற்பட்டது. அதுமுதல் அவர் பல ஆண்டுகள் படுக்கையிலிருந்தார்.

## 4. படுக்கையிலும் செய்யுளியற்றுதல்

அம்மையார், படுக்கையி லிருந்தபோதும், ஓவாது பல உயர்ந்த நூல்களைக் கற்று ஆராய்ந்துவந்தார். தம் பத்தொன்பதாவது ஆண்டாகிய 1828இல், 'மனத்தைப் பற்றிய கட்டுரையும், ஏனைய செய்யுட்களும்' என்னும நூலைப் பதிப்பித்தார்.

## 5. அன்னையாரின் இறப்பு

நெடு நாட்களாக நோயாயிருந்த எலிசபெத்தின் அன்னையார், தம் பதினொரு குழந்தைகளையும் விட்டு இறந்தனர்! இதுவுமல்லாமல், இவர் தந்தையாருந் தம் பெரும பொருளின் ஒரு பகுதியை யிழந்தார்! தம் அருமை மனைவியையும், பெருஞ் செல்வத்தையும் இழந்து பாரெட் துரைமகனார் மிகவுங் கவலைப்பட்டு வருந்தினார்! தகப்பனாருக்கு ஆறுதல் சொல்லித் தேற்ற வும், அவர் உடன்பிறந்தாரைப் பாதுகாக்கவும் அம்மை யார்க்குப் பொறுப்பு ஏற்பட்டது. பொருட்கேட்டின் காரணமாக, எலிசபெத்தின் தந்தையார், தாமிருந்த அழ கிய மாளிகையை விற்றுவிட்டுத் தம் மக்களுடன் டெவன்ஷெயரிலுள்ள சிட்மவுத் என்னும் ஊரில் இருந்தனர். இக்காலத்தில், அம்மையார் சில செய்யுட் டொகுதிகளை வெளியிட்டார். இவைகள் பொருட்செறி வும், சுவைமிக்கனவாயும் இருந்தன. இவைகளை அறி வுடையோர்கள் கற்றபின்னர்தான், அம்மையார் ஒரு சிறந்த செய்யுளாசிரியராகப் பாராட்டப்பட்டார். இவ ருடைய நூல்களை ஆராய்ந்து மதிப்புரை அளித்தவர்

கள் இவரது நுட்பமான அறிவின் திறத்தையும் கடவு ளுணர்ச்சியையும் மிக வியந்தெடுத்துப் பேசினார்கள்.

## 6. அம்மையார் இலண்டனுக்கு வருதல், உடல் நலங் கெடுதல்

எலிசபெத்தும், அவர் தந்தையார் உடன் பிறந்தா ரனைவரும் 1833-ஆம் ஆண்டில், இலண்டன் நகரில், நெருக்கமான பெரிய வீடுகள் நிறைந்த தெருவில் காற் றோட்டமில்லாத வீடொன்றில் இருந்தார்கள். இறைவ னருளாற் படைக்கப்பட்ட இயற்கைக் காட்சிகளி னூடேயிருந்த பெருநலமும், பெரு மகிழ்வுந் தரத் தக்க அழகுமிக்க இடத்தைவிட்டு அம்மையார் இடுக்கான இடத்திற்கு வந்ததும், இவர்க்கு உடல் நலங் கெட்டது. இவர், முன்னே, குதிரைக் கடிவா ளத்தாற் புண்பட்டதிலிருந்து, பெரும்பாலும் உடல்நல மில்லாமலே யிருந்தார். மக்கள் நெருக்கம் மிகுந்த நகர வாழ்க்கை, அம்மையார்க்குச் சிறிதும் இசைய வில்லை. தந்தையாரும் இவரை மிகக் கருத்தாகப் பார்த்துவந்தார். உடன் பிறந்தாரனைவரும், இவரிடம் மிகுந்த அன்பு பாராட்டினார்கள். எலிசபெத் நோயா யிருந்து, அறையை விட்டு வெளியே வாராத காலத்தும், ஊக்கத்தைக் கைவிடாமல், படிப்பதும் எழுதுவது மாகவே இருந்தார். எனினும், அவரது உடல்நலங் குன்றி வருவதுகண்ட மருத்துவர்கள், அவர் டோர்கே என்னும் ஊரிற் சிலகாலமிருந்தால் நலம் பெறுவார் என் றார்கள். அப்போது, அம்மையார், தம்மிடத்து அன்பு மிக்க அருமைத் தம்பியார் எட்வர்ட் என்பாரோடு அவ் வூர்க்குச் சென்று, அங்கே சிலகாலந் தங்கியிருந்தார். அங்கு அவர் பிழைப்பாரென்றுகூட நம்ப இடமில்லா

திருந்தனர். பின்னர், ஆண்டவனருளால், இடையிடையே சிறிது நலம் பெற்ருர். அப்போதெல்லாம் அவர் வாளா இராமல், அருங் கருத்துக்களடங்கிய **தூக்கம்** என்னும் செய்யுட் புத்தகத்தை வெளியிட்டார்.

## 7. எட்வர்ட் நீரில் மூழ்கிப் போதல்

டோர்கேயி லிருந்தபோது, அம்மையாரின் உடன் பிறந்தாராகிய எட்வர்ட், தம் நண்பர்களோடு கடலில், வேடிக்கையாகப் படகு தள்ளிக்கொண்டு போகையில், அது கவிழ்ந்துவிட்டது! எட்வர்டும் மூழ்கி இறந்தார். மற்ற உடன்பிறந்தார்களைவிட அம்மையார்க்கு இவரிடந்தான் மிகுந்த அன்பு. ஆகலான், இவர் இறப்பைக் கேட்டு ஆற்ருெணுத் துயரமடைந்தார்! நினைக்கும்போதெல்லாம் ஏங்கி அழுவார்; 'தம்பி என்னேடு வாராதிருந்தால் அவன் இறந்திருக்க மாட்டானே' என்று பலமுறை வருந்துவார்! அவன் பெயரைக் கேட்டாலும் நடுங்கித் துயருறுவார். இவ்வாறு, தம் மனத்திலுண்டான, துன்பத்தை ஒரு செய்யுட் டொகுதியில் மிக உருக்கமாகப் பாடியிருக்கிருர். சிறிது உடல் தேறியதும், அம்மையார் தம் ஊருக்குப் போகவேண்டுமென்று விரும்பினர். இவர் வரும்போது தந்தையார், இலண்டன் நகரில், **விம்பில்** தெருவில் குடியிருந்தார். எலிசபெத் பெருமாட்டியார் இயற்றிய அருமையான பாடல்களைப் படித்த அறிஞர்கள் பலர், அவரைப் பார்க்கவந்தார்கள். அம்மையார் நீண்ட காலமாக நோய்வாய்ப்பட்டுத் தனியேயிருந்து இருட்டறையில் காலங்கழித்தவராகலான், இவர் நண்பர்களோடு அளவளாவிப் பேசுதல், முதலில் தொல்லையாகவேயிருந்தது.

இவர், தம் இல்லத்தின், மேல்மாடியிலுள்ள ஓரறையில் வைக்கப்பட்டார். இவரை ஒரு சிலரே வந்து பார்க்கக் கூடுமென்று அவர் தந்தையார் அறிவித்தார்.

## 8. அம்மையாரின் நண்பர்கள்

இவர், தாமிருக்கும் வீட்டிற்கு வெளியே, இலண்டன் நகரத்திலும் ஏனைய இடங்களிலும், நடப்பனவற்றைத் தெரிந்துகொண்டு அவற்றைத் தம் செய்யுட்களில் திறம்பட எழுதி வெளியிட்டார். குறிப்பிட்ட ஒரு சிலர், அம்மையாரைப் பார்க்க ஆணை பெற்றனர். அவர்களில், ஒருவர், கென்யன் என்னும் பெரியாரும், இன்னொரு மாதருமாவர். கென்யன் பெரியார், வெளி உலகச் செய்திகளை அம்மையார்க்கு அடிக்கடி வந்து அறிவிப்பர்; வேண்டும் நூல்களையும் கொடுத்து உதவுவார். 1837-ஆம் ஆண்டில், நான்காம் வில்லியம் அரசர் இறந்தவுடன், அப்போது பட்டம்பெற்ற நம் விக்டோரியா அரசியாரின்மேல் ஒரு நீண்ட பா அமைத்து வெளியிட்டார். பிறகு ஒரு கிழமைக்குள் 'விக்டோரியா உகுத்த கண்ணீர்' என்னும் செய்யுளைப் பாடினார். இவ்வருமையான பாட்டுக்கள் எல்லாராலும் மிக அருமையாகப் பயிலப்பட்டன.

## 9. நிலக்கரிச் சுரங்கங்களில் வேலை பார்ப்போரை மீட்டல்

1844-ஆம் ஆண்டில், அம்மையார், தாமெழுதிய பல பாடல்களில் 'குழந்தைகளின் அழுகுரல்' என்னும் செய்யுட் டொகுதியை வெளியிட்டார்.

அக்காலத்தில், நிலக்கரிச் சுரங்கங்களிலும், தொழிற்சாலைகளிலும் உழைக்கும் சிறுவர், சிறுமிகள்,

ஏழைப் பெண்கள் வேலைசெய்துவருங் காலத்தையும், முறைகளையும் பற்றி ஏதொரு சட்டமும் ஏற்படவில்லை.

10 ஆண்டுகட்கு உட்பட்ட சிறுவர், சிறுமிகள், ஏழைப் பெண்கள், நல்ல காற்றும் வெளிச்சமு மில்லாத நிலவறைகளில், 14, 15 மணி நேரம் ஓரே வேலையை ஓயாமல் செய்யுமாறு துன்புறுத்தப்பட்டனர். இன்னும், அங்கே சிறுவர்கள், நிலக்கரி ஏற்றிய சுமைமிக்க வண்டிகளில் பிணைக்கப்பட்டிருக்கிற சங்கிலிகளைத் தம் இடுப்பிற் கட்டிக்கொண்டு, குனிந்தபடியாய்ப் பெரும்பாலும் நாள் முழுதும் இழுத்து வேலை செய்தனர். இவர்கட்குக் கல்வி மணமே இல்லை. இவர்கள் விளையாட்டென்பதே அறியார்! மகிழ்ச்சியும் மலர்ந்த முகமும் அவர்கள்பால் இல்லையாயின! அங்குக் கடுமையாக வேலை பார்க்கும ஏழைப் பெண்கள், கல்வி அறிவும், நல்லோர் சேர்க்கையும் இல்லாமையால், அறிவும நாகரிகமுமின்றி நல்லுணர்ச்சி யற்றவர்களானார்கள். இருபத்து நான்குமணி நேரத்தில், 15 மணி நேரம் வேலை செய்துவிட்டு வீட்டிற்குச் சென்றால், இவர்கள், அங்கு என்ன மகிழ்ச்சியை அடைவார்கள்? இச்செயல்களையெல்லாம் எலிசபெத் அம்மையார் அறிந்து மனம் வருந்தினார்!

இக்கொடுஞ் செயல்களையெல்லாம், நன்கு எடுத்துக் காட்டி, மிக உருக்கமாக, 'குழந்தைகளின் அழுகுரல்' என்னும் செய்யுட்டொகுதியை வெளியிட்டார். இதுபற்றிப் பேராவல் கொண்டிருந்த மக்களெல்லாரும், இப்பாக்களைப் பயின்று இக்கொடுமை ஒழிய வேண்டுமென்று பேருழைப்பெடுத்தனர்! இச்செயலைக் குறித்து அரசியல் மன்றத்தார், ஒரு சட்டம் கொண்டுவரல் வேண்டுமென்று பலர்

மன்றுடிக் கேட்டுக்கொண்டார்கள். அதற்கிசைந்து மன்றத்தார் 14-ஆண்டுகட்குட்பட்ட சிறுவர், சிறுமிகள் எவரையும் வேலைக்கு வைத்துக்கொள்ளக்கூடாதென்றும், அவர்கள் வேலை செய்யவேண்டிய கால அளவையுங் குறிப்பிட்டார்கள். இன்னும் பெற்றோர் ஒவ்வொருவரும், தம் பிள்ளைகளைப் பள்ளிக்கூடங்கட்குக் கட்டாயம் அனுப்பவேண்டுமென்றும் சட்டம் ஏற்படுத்தினர். அம்மையார் எழுதி உதவிய, அரிய பாக்களால், பிள்ளைகளுக்குத் தீமைகள் ஒழிந்தன. உயர்ந்த கல்வி முறை அவர்கட்குக் கையாளப்பட்டது.

## 10. அம்மையாரின் திருமணம்

அம்மையார், தம் வீட்டுச் சிறையி லடைபட்டு நலமில்லாமலிருந்த காலத்தும், நூல்கள் எழுதுவதையும், நண்பர்கட்குக் கடிதங்கள் எழுதுவதையும் நிறுத்தவில்லை. இவரது கல்வித் திறனும், செய்யுட்புலமையும் நாடெங்கும் ஊரெங்கும் பரவலாயின. இவர்தம் சிறைவாழ்வு நீங்கும்பொருட்டு, **ராபர்ட் பிரௌனிங்** என்னும் பெயர்பெற்ற செய்யுளாசிரியர் ஒருவர், அம்மையார்பால் காதல் கொண்டார். அம்மையாரது செய்யுட்பகுதிகளைப் பல முறை பயின்று பெருமகிழ்வு அடைந்தார். பல பாராட்டுக் கடிதங்கள் எழுதினர். இவர் 1845-இல் தம் நண்பரொருவருடன் அம்மையாரைக் காண வந்தார். அப்போது, அவர் உடல் நலமில்லா திருந்தமையின், அவரைப் பார்க்க முடியாமற் போனர். இதுமுதல், எலிசபெத்தும், பிரெளனிங்கும், கடிதவாயிலாகச் செய்யுட்களைப் பற்றியும், வேறு பல செய்திகளைப்பற்றியும் ஆராய்ந்து எழுதிவந்தார்கள். இவ்வாறு நான்கு திங்கள் கழிந்தன.

மறுபடியும், ராபர்ட் பிரௌனிங், அம்மையாரைப் பார்க்க வந்தார். அவர் இருட்டறையில், மெலிவான உடலினராயிருப்பதை அறிந்தாராயினும், உரமுடைய உள்ளமும், கல்வி ஒளி வீசும் அவரது முகஅழகும் பிரௌனிங் மகனாரது உள்ளத்தைக் கொள்ளை கொண்டன! அம்மையாருடைய உருவம் அழகு மிக்கதென்று மாதர் ஒருவர் மிகவும் புகழ்ந்து எழுதியிருக்கின்றார். அழுக்குக்குள்ளிருக்கும் ஒளிமணிக்கல் (மாணிக்கம்) தன் ஒளி கெடுமா? கெடாதன்றே? அதுபோன்றே இருட்டறையிலிருந்தாலும், அம்மையாரின் அறிவும் அழகும் கெடாமல் மிளிர்ந்தன. இனியகுணமும் அழகும் மிக்க பிரௌனிங் என்னும் செய்யுளாசிரியர் தம மிடம் அன்புகொண்டது பெருமாட்டியார்க்கு மிகவும் மகிழ்ச்சியாயிருந்தது! ஆனால், இவர்தம் உடல்நிலை எப்போதும் சீர்கெட்டதாயிருப்பதால், மணத்தை நினைப்பதாற் பயனில்லை என்றே எண்ணினார். என்றாலும், பிரௌனிங் தம்மை மிகவுங் காதலிப்பதை அறிந்து திருமணத்திற்கு ஒத்துக் கொண்டார்.

அம்மையாரின் தந்தையார், தாம் நினைத்தபடியே எதனையுஞ் செய்யும் இயற்கையுடையவர். தம் சொற்படியே தம் மக்கள் நடக்கவேண்டுமென்று அவர்களை வற்புறுத்தினார். எலிசபெத் அம்மையார், மழைக்காலத்தில் ஊர்மாறிச், சூடான கால நிலையுள்ள இத்தாலிய நாட்டிற்குச் சென்றால்தான் நலம் பெறுவார் என்று மருத்துவர்கள் கூறினார்கள். இஃதறிந்த, இவர்தம் நண்பினரான ஜேம்சன் என்னும் அம்மையார், அவரை இத்தாலிய நாட்டிற்கு அழைத்துச் செல்வதாகச் சொன்னார். உடனே தந்தையார் மறுத்துவிட்டார். இவர், தம் மகளார் நலம் பெறுவதற்குக்கூட அவர் வெளியே

போதல் கூடாதென்றார். இவர் அன்பின் தன்மை மிகக் கொடிது! அம்மையார்க்கு மணமே வேண்டுவதில்லை யென்று அவர் தந்தையார் கருதினார். தந்தையார் தம் மணத்திற்கு எவ்வகையிலும் இசையாமை கண்டு 1846-ஆம் ஆண்டில், ஒரு நாள் விடியற்காலையில் தம் வீட்டவர் எவரும் அறியாதபடி வெளியே போய், அருகாமையிலிருந்த கோயிலொன்றில் எலிசபெத் அம்மையாரும் பிரௌநிங் என்பாரும் திருமணஞ் செய்து கொண்டனர். அம்மையார் வெளியே போம்போது, தன் தங்கைமார் இருவரிடமுஞ் சொல்லவில்லை. ஏனெனில், 'நீங்கள் எலிசபெத் போம்போது, ஏன் தடை செய்யவில்லை?' என்று தந்தையார் அவர்களிடஞ் சினங் கொள்வாரென் றெண்ணினார்.

## 11. மணமக்களிருவரும் இத்தாலியாவுக்குப் புறப்படல்

மணமக்களிருவரும், உடல் நலத்தின்பொருட்டு இத்தாலிய நாட்டிற்குப் புறப்பட்டனர். இதை அறிந்த அவர் தந்தையார் பெருஞ்சினங் கொண்டு 'இனி ஒருகாலும் எலிசபெத்தைப் பாரேன்' என்று சொல்லி விட்டார். மகளார் அவரை எவ்வளவோ வேண்டியும் பயனில்லை. பின்னர், அம்மையார், தங்கணவனாரோடு தம்பால் அன்புமிக்க ஒரு பணிப்பெண்ணையும், தம் அருமை நாயையும் அழைத்துக்கொண்டு இத்தாலிய நாட்டிற்குச் சென்றார். தம்மைமிகவும் அன்புபாராட்டி வளர்த்த தகப்பனாரின் மனவெறுப்பிற்காக வருந்திச் சில ஆண்டுகள் இங்கிலாந்திற்குவர விருப்பமில்லா திருந்தனர்.

அம்மையார், தந்தையார் வீட்டிலிருந்து வாழ்ந்த வாழ்க்கைக்கு, மணவாழ்க்கை முற்றும் மாறாயமைந்தது. இவர் தங்கணவனோடு நல்ல காற்றுள்ள இடங்களில் உலாவப் போய் வருவார். இத்தாலிய நாட்டின் வெப்பநிலை அம்மையார்க்கு வரவர நன்மை அளித்தது. இவ்விருவருந் தமக்குக் கிடைத்த பொருளைக் கொண்டு மகிழ்வாகவே காலங் கழித்து வந்தனர். மணமானபின், பெருமாட்டியார், தங்கணவனார்க்கெழுதிய கடிதமொன்றில், தம் முன் நிலைமையை மிக விரிவாயும் உருக்கமாயுங் கூறியிருக்கின்றார். அஃதாவது: தங்களுடைய தொடர்பிற்குமுன் என் வாழ்க்கை இவ்வாறு இருந்ததென்பதைத் தாங்கள் அறிந்ததில்லை. என் அறையில், யான் தனிமையாயிருந்து உலக வாழ்விலும் விருப்பமில்லாமலிருந்தேன்; யானெழுதுஞ் செய்யுட்களும், நலமற்ற என்னிடத்திலிருந்தால், அவை சுவை கெட்டு வீணாய்ப் போகுமென்றெண்ணி அவைகளை அப்புறப் படுத்தினேன். என் அருமை நாய்கூட வெளியே போய் நலம்பெறாமல் என் இருட்டறையிலேயே என்னோடு இருந்து வருந்த வேண்டியதாயிற்று. அதற்காகவும் வருந்தினேன்; என் அன்புள்ள உறவினரும், யான் அவர்கட்கு ஒரு பொறை என்பதையுங்கூட நினையாமல் என்னிடம் பேரன்பு பாராட்டினர். இந்நிலையில், தாங்கள் எனக்கு அன்பான கடிதங்கள் எழுதியதை நினைக்க வியப்பா யிருக்கிறது என்பதாகும்.

எலிசபெத் அம்மையாரும், அவர்தங் கணவனாரும் இத்தாலிய நாட்டில், தாம் விரும்பியவைகளைப் பெற்று மகிழ்வாகச் செய்யுட்களியற்றுவதிலும், அறிவுடையோர் பலரைக் கண்டு மகிழ்வதிலுமாகக் காலங் கழித்

தனர். ஆயினும், அம்மையார்க்குத் தம் குடும்பத்தா ரைப் பற்றிய கவலை மிகுதியாக இருந்தது. இவர் தந்தையாரை மன்னிப்புக் கேட்டுப் பல கடிதங்கள் அவர்க்கு எழுதியிருந்தார். பல ஆண்டுகளாக எழுதிய கடிதங்களை யெல்லாம், அவர் பிரித்துப் பாராமலே அனுப்பிவிட்டார். இவர் தங்கைமாரிட மிருந்துமட்டும் கடிதங்கள் அடிக்கடி வந்தன. இவர்களிருவரும் இங்கி லாந்திற்கு வந்தபோது தந்தையார் அறியாமலே தங்கை மாரிருவரையுங் கண்டு மகிழ்ந்தார். தங்கைமாருந் தந்தையா ரறியாமலே மணந்துகொண்டனர். இவர்தம் தகப்பனுர், 1857-இல் தம் மகளார் இருவர்க்கும் மன்னிப்புக் கொடாமலே இறந்து போனுர்.

## 12. குழந்தைப் பேறு

இறந்தாலொழிய, உயிரோடு ஒருகாலும் நலம் பெறுவதில்லை என்றெண்ணி, உலக வாழ்வில் வெறுப் படைந்து நின்ற அம்மையார்க்கு, இப்போது எல்லா நலங்களுங் கிடைத்ததோடு, பெறற்கரிய மகப்பேறும் உண்டாவதாயிற்று.

1841-ஆம் ஆண்டில், அம்மையார்க்கு அறிவும் அழகும் மிக்க ஆண் மகவு பிறந்தது! இக்குழவி யிடத் தில் பெற்றோர் வைத்த அன்பிற்கோர் அளவேயில்லை! இம்மகன் பிறந்த பிறகு, அம்மையார் எழுதிய கடிதங் களிலெல்லாம் அவனுடைய பேச்சும் விளையாட்டுக் களுமே நிரம்பி யிருந்தன.

அம்மையாரும், அவர் கணவனுருங் குழந்தையுமாக இத்தாலிய நாட்டில், பீசாவிலும்; பிறகு ப்ளாரன்சிலும் இருந்து வந்தார்கள். இத்தாலியரும், அமெரிக்கரும்

இவ்விருவரிடத்தும் மிக்க அன்புடையராய், அவர்களை அடிக்கடி வந்து பார்த்தனர்.

## 13. அம்மையார் இத்தாலியரின் விடுதலைக்காகப் பாடுபடல்

அக்காலத்தில் இத்தாலியர், ஆஸ்திரேலியா நாட்டினர் தமக்கிட்ட கட்டுப்பாடுகளினின்றும் விடுவித்துக் கொள்ள முயன்றார்கள். அம்மையார், அந்நாடு விடுதலை அடையவேண்டும் வழிகளைப் பற்றி மிக நுட்பமான கருத்துக்களைச் செய்யுட்களில் எழுதி வெளியிட்டார். இப்பாக்கள் இத்தாலிய நாடு முழுதும் பரவி, அம்மக்களால் பெரிதும் பாராட்டப்பட்டு வந்தன. அம்மையார் தம் எழுதுகோலால், அந்நாட்டினர் விடுதலை பெறும் பொருட்டுப் பெரும்பாடுபட்டார்.

இவர் 1853-ஆம் ஆண்டில், பிளாரன்சில் இருக்கும் போது, 'அரோராலே' என்னும் பெரிய புத்தகத்தை எழுதி முடிக்க மூன்றாண்டுகள் ஆயின. இவர் இத்தாலியாவிலிருந்து, இலண்டனுக்கு வரும் வழியில், இவ்வளவு நெடுங்காலம் பாடுபட்டு எழுதிய புத்தகமும், அவர்தம் அருமை மகனுக்கு முதன்முதல் தைத்த அழகிய உடுப்புக்களும் வைத்திருந்த பெரிய பெட்டி ஒன்று தொலைந்து போயிற்று. தொலைந்த பொருள்களுக்காக அம்மையார் மிகவும் வருத்தப்பட்டார். நல்ல காலமாக அப்பெட்டி துறைமுக அலுவலகத்தில் காப்பாற்றப்பட்டு, அவர்தம் உடன்பிறந்தாரால் கொண்டு வரப்பட்டது. சில திங்கள் இலண்டனிலிருந்துவிட்டுப் பின் பிளாரன்சுக்குச் சென்றார்.

## 14. அம்மையார் நோய்வாய்ப்படல்

இத்தாலியர் தம் உரிமைக்காக எவ்வளவோ பாடு பட்டனர். அம்மையாரும் அவர்கட்கென அல்லும் பகலும் உழைத்தார். ஆனால், 1859-இல், இத்தாலியர்க் குப் பிரான்ஸ் நாட்டார் துணைசெய்ய முன்வந்தனர். **நெப்போலியன்** என்னும் மன்னர் கூறியவாறு நிறை வேறாமல், இத்தாலியர் தோல்வி யடைந்தனர். **வில்லா பிரான்கா** என்னும் தணிவு உடன்படிக்கை இருவர்க் கும் நடந்தேறியது. இத்தாலிய நாட்டுக் கவலையால் நம் பெருமாட்டியார்க்கு உடல்நலங் கெட்டது. 1860-ஆம் ஆண்டு, அவர் தம் அன்புமிக்க உடன்பிறந் தாள் இறந்த செய்தியும் வந்தது! 1861-ஆம் ஆண்டில் இத்தாலிய நாட்டு அரசியல் வல்லுநர் **காவூர்** என்னும் சிறப்புடையாளரும் இறந்தார்! இத்தாலிய நாட்டுக் கொதிப்பும், தம்மிடம் அன்புமிக்க இவ்விருவர்களது இறப்பும், அம்மையார்க்குத் தீரா நோயை உண்டு பண்ணின.

## 15. அம்மையார் முடிவு

பிறகு, அம்மையார் உரோம நாட்டிலிருந்து பிளா ரன்ஸ் நகருக்குத் திரும்பிப் போனார். அங்கு நல மடையலாமென் றெண்ணினார். ஆனால், அக்கருத்திற்கு மாறாக, அவர் படுக்கையிலேயே இருந்து, தங்கணவ னார்க்கும், அருமை மகனுக்கும் ஆறுதல் சொல்லிக் கொண்டிருக்கும்போதே தம் இன்னுயிர் நீங்கப்பெற்று இறைவனடி சேர்ந்தார்!

இவர் அரிய உடல், பிளாரன்ஸ் நகரத்தில் அடக்கஞ் செய்யப்பட்டது. அவ்வூரவரும், ஏனைய

நாட்டு மக்களும் எலிசபெத் மெல்லியலாரது இழப்பிற் காகப் பெரிதும் வருந்தினர். அவருடைய அருமையான செய்யுட்களைப் படிக்காதார் எவருமிலர். எல்லார்க்கும் நன்றாக விளங்கக்கூடிய நடையில் பாக்கள் அமைத் தார். இவ்வம்மையாருடைய கல்வித்திறனுஞ் செய்யுட் புலமையும் உலகம் உள்ளளவும் மறக்குந் தரத்தன அல்ல! இவர் இறந்த பின்னர், அவர்தம் அருமைக் கணவனார், அச்சிடப்படாதிருந்த அவருடைய பாடல் களையெல்லாம் அச்சிடுவித்தார். அம்மையாரது அழகிய திருஉரு சலவைக் கல்லாற் செய்யப்பட்டு அவர் வாழ்ந்த இல்லத்தின்மேல் வைக்கப்பட்டது.

அம்மையார் உயர்குடிப் பிறப்பினராய்ச் சிறந்த மாளிகையில், தம் இளமைக் காலத்தைக் கழித்தாராயி னும், இடையில் தம் தந்தையார்க்கு ஏற்பட்ட பொருட் கேட்டால் இலண்டன் நகரிலுள்ள ஒரு வீட்டின் பின் புறத்திலிருக்கும் ஓர் அறையில் இருந்தார். இவர் இருட் டறையில இருந்தாலும், இவர்தம் மன ஒளி சிறிதும் இருண்டு கிடந்ததில்லை.

இவர், தம் இளமைக் காலத்தில், குதிரையின் கடி வாளம் விழுந்ததிலிருந்து நாலைந்தாண்டுகள் படுக்கை யில் இருந்தார். அப்போது தம் நோயையே பெரிதாக நினையாமல், அரிய பொருள்கள் பற்றிச் செய்யுட்கள் எழுதத் துவங்கினார். உடல் நலங் கெட்டால் அறிவும் மனநிலையுங் கெடுமென்று சிலர் கூறுவர். ஆனால், அம் மையாரின் உள்ள ஊக்கத்திற்காக, ஆண்டவன் மகிழ்ந்து, அவர் மனத்தகத்திருந்து அறிவினொளியைப் பெருக்கினார்! பாக்களும், வியத்தகு முறையில் பொருட் செறிவுடையனவாயிருந்தன.

பெண் மக்களிற் பலர், தமக்குச் சிறிது நோய் வரினும் அதனைப் பெரிதாக எண்ணி எண்ணி வருந்திப் புலம்பியபடியாய்ப் படுக்கையிற் கிடப்பர். இவ்வாறு மன உறுதியைத் தளரவிடலாகாதென்பதைக் குறித்தே ஔவைப் பிராட்டியார் 'ஊக்கமது கைவிடேல்' 'நோய்க்கு இடங்கொடேல்' என்றருளினர். சிறு நோயையும் பெரிதாக நினைந்து கவலைப் படுவதுதான் நோய்க்கு இடங்கொடுப்பதாகும்!

அம்மையார், தம் இடைப்பட்ட காலத்திலிருந்த வாழ்க்கையை, நோக்கும்போது அவரது, பிற்கால வாழ்க்கை அத்துணை மேன்மையும்,மகிழ்ச்சியும் உடைய தாய் அமையுமென்பதை எவரேனுங் கனவிலும் நினைக்க முடியுமா? அவரே தம் பிற்கால வாழ்க்கையில் ஒரு நல்ல மாறுதல் ஏற்படுமென்று நினைக்கவேயில்லை.

இவர், தம் வாழ் நாள் முழுவதும், பிறர் நலத்தின் பொருட்டே உழைத்து வந்தார். ஆகலான், 'எல்லா உயிர்க்கும் நன்மையே செய்வானாகிய ஆண்டவன் அவர்க்கு எதிர்பாராத இன்பவாழ்வை அளித்தனன்! நன்மை செய்வார் நலமே பெறுவரென்பதைக் கருதியே 'நன்மை கடைப்பிடி' என்றார் நம் மூதாட்டியார். அம் மையார்தம் தூய மனத்திற்கிசைந்தபடி மணமகனார் அமைந்ததும் இறைவனருளே யாகும்.

எலிசபெத் அம்மையார் நோயாயிருந்த காலத்தும், மனத்தெளிவுடையராய், எந்நேரமும் படித்தும் எழுதியும் செய்யுளியற்றியும் வந்தாரென்றால், உடல் நலத்தோடிருக்கும் நம் பெண்மணிகள் நேரத்தை வீண்போக்காமல், எவ்வளவு படித்து மேம்பட வேண்டுமென்பதை அவர்களே உணர்ந்து பார்த்தல் வேண்டும்.

# ௯. ஹாரியட் பீச்சர் ஸ்டோ அம்மையார்

## 1. அம்மையாரது பிறப்பு

அமெரிக்காக் கண்டத்தில் கன்னெக்ட்டிகட் என்னும், நாட்டில், லிச்பீல்ட் என்னும் ஊரில், 1811-ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 14-ஆம் நாள் ஹாரியட் பீச்சர் ஸ்டோ என்னும் மாதரார் பிறந்தார். இவர்தம் தந்தையார் கிறிஸ்துவமத விரிவுரையாளர். (பிரசங்கியார்) இவர் அப்பக்கங்களிற் புகழ்பெற்றவர். இவர்க்குக் குழந்தைகள் எட்டுப்பேராவர். அவர்களில் ஹாரியட் அம்மையார் ஏழாவது மகளாவர். இவர் நான்காண்டினராயிருக்கும் போது, தம் அருமை அன்னையார் எட்டுக் குழந்தைகளையும் விட்டு இறந்து போயினர்! இவரது சிறந்த குணங்களைப்பற்றி அங்குள்ளாரெல்லாரும் பேசிப்பேசி, அவர் குழந்தைகட்காக மிகவும் வருந்தினார்கள்.

## 2. அம்மையாரது இளமைக்காலம்

ஹாரியட், தம் தாயார் இறந்தபிறகு, அவர் பாட்டியார் வீட்டில் மிக்க அன்புடன் வளர்க்கப்பட்டார். இவர் ஆறுண்டினராயிருந்த போது இவர் தந்தையார் மறுமணஞ் செய்துகொண்டார். இவர் சிற்றன்னை சிறந்த அழகும உயர்ந்தகுணமும் உடையவர். தாயில்லாக் குழந்தைகளை மிக அன்பாகப்பார்த்துவந்தார். அம்மையார், தம் உடன் பிறந்தாரோடு மரஞ்செடி கொடிகளடர்ந்த குளிர்ச்சியான அழகிய இடத்தில் மகிழ்வுடனிருந்தார். தந்தையார் படித்துக்கொண்டிருக்கும் போது, அம்மையார் அவர் அருகேயிருந்து மிகக் கருத்

தாய்க் கேட்டுக்கொண்டிருப்பார். பள்ளிக்கூடத்திலும் இவர் நன்ருய்ப் படிப்பவரென்று பெயர் பெற்ருர். இவர் பத்தாண்டுச் சிறுமியாயிருக்கும் போது 1812 இல் இவர்க்கு ஒரு தங்கை பிறந்தாள். இவர் பள்ளிக்கூடம் போய்ப் படிக்கிற நேரம் போக, மற்ற வேளைகளில் அக் குழந்தையை வைத்துக்கொண்டு வளர்ப்பது இவர்க்குப் பெரிய வேலையாயிற்று. அவர் அதனை வைத்துக் கொண்டிருக்கும்போதுங்கூடப் புத்தகத்தைக் கைவிடுவதில்லை. எந்நேரமும் எந்தவகையிலும் பயின்று கொண்டேயிருப்பார். இவ்வாறு இவர் பள்ளிக்கூடத்திலும், அறிவுடைய ஆசிரியர்களிடமுங் கற்றுக் கல்வியில் நன்ருகத் தேர்ச்சியடைந்தார். படிப்பது மட்டும் போதாதென்று 'செல்வத்துட் செல்வம் செவிச் செல்வம்' என்றபடி, அம்மையார் அறிஞர்பலர் பேசுமிடங்கட்குச் சென்று சிறந்த பொருள்களைக் கேட்டுப் பல செய்திகளை அறிந்து வந்தார். ஆகலான், இவர், தம் பத்தாவதாண்டிலேயே கட்டுரைகள் எழுதத் துவங்கினர். இவரெழுதியவைகளெல்லாம் துவக்கத்திலேயே சிறந்தவைகளாய் அமைந்தன. இவர்தம் பள்ளியில், கட்டுரைத் தேர்வு வைத்தபோது ஹாரியட் எழுதிய கட்டுரையே உயர்ந்ததாகத் தெரிந்தெடுக்கப்பட்டது. பெரும் புலவர்கள் கூடிய கூட்டததில் அதனைப் படிக்கும் போது "இதனை எழுதியது யார்?" என்று அம்மையாரின் தந்தையார் கேட்டார். அதற்கு அங்குள்ளார் ' நுங்கள் மகள் தான் ' என்றனர். அப்போது, அவரடைந்த மகிழ்ச்சிக்கோர் அளவேயில்லை.

" ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய் "

என்ற வள்ளுவப்பெருமான் திருமொழி ஈண்டு இவர்க்குப் பொருந்துதல் காண்க. அக்காலத்தில், மஞ்சள் கடிதத்தில், கை தேராத நிலையில் ஆரியட் சிறுமியாரெழுதிய அக்கட்டுரையின் தலைப்பு 'உயிர் நிலையுள்ளதென்பதை இவ்வுலகத்தைக் கொண்டு மெய்ப்படுத்த முடியுமா?' என்பதுபற்றி யாகும். அம்மையார், தம் பன்னிரண்டாவதாண்டில், இவ்விழுமிய பொருள்பற்றி ஆராய்ந்தெழுதியது எல்லார்க்கும் பெருவியப்பாக இருந்தது! இயற்கை அறிவுடையோர் ஆண்டிற் சிறியராயினும், அவர்க்கு மெய்ப்பொருள்கள் தாமாகவே விளங்கித் தோன்றுதல் காண்க.

## 3. அம்மையார் ஹார்ட் போர்டுக்குப் பயிலச் செல்லுதல்

இக்கட்டுரை எழுதிய பின்னர் அம்மையார், மிகுதியாகக் கல்வி கற்கவேண்டுமென்று ஹார்ட்போர்ட் என்னும் ஊருக்குச் சென்றார். அங்கே இவர்தம் தமக்கையார், பெண்களுக்கென ஒரு புதிய பள்ளிக்கூடம் ஏற்படுத்தினர். இதில் அம்மையார் சேர்ந்து பயிலத் துவங்கினார். தமக்கையார் கேத்ரைன் அப்பள்ளிக்கூடத் தலைவியாவர். இவர் மேதகு அறிவும், உயர்ந்த ஒழுக்கமும், சிறந்த கடவுளுணர்ச்சியுமுடையவர். எல்லாரிடத்தும் அன்பாயும் பணிவாயும் அளவளாவிப் பேசுவார். ஆகலான், ஆரியட் அம்மையார், தம் தமக்கையாரின் பார்வையால் பெருநலங்களடைந்தார்! இவர் பள்ளிக்கூடத்தில் ஏற்படுத்திய தேர்வுகளிலெல்லாம் மிக எளிதாகத் தேறினார்.

## 4. இவர் தமக்கையார் கேத்ரைன்

1822-இல், ஆரியட்டின் தமக்கையார், அலெக்சாண்டர் பிஷர் என்பார் ஏற்படுத்திய ஒரு பள்ளிக்கூடத்தில், அவரிடம் ஆசிரியர் வேலையிலமர்ந்தார். இவர் அப்பெரியாரின் உதவியால், மேன்மேலும் அறிவு நூற் கல்வியில் தேர்ச்சிபெறலாமென் றெண்ணினர். ஆனல், இவ்வாசிரியர், தம் பள்ளிக்கூடத்திற்கு வேண்டிய புத்தகங்கள் வாங்கும்பொருட்டு, ஐரோப்பாவிற்குப் போகக் கப்பலேறினர். அவர் ஏறிச்சென்ற கப்பல், அயர்லாந்தின் பக்கத்தே பாறையில் தட்டுண்டு உடைந்தது! அக்கப்பலிலிருந்த பிஷர் அறிஞரும் கடலில் மூழ்கி இறந்தார். இவரிறப்பைக் கேட்டுக் கேத்ரைன் அம்மையார் மிகவும் வருந்தினர். பின்னும் ஒருவாறு தம் மனத்தைத் தேற்றிக்கொண்டு, அதன்மேற் செய்யவேண்டும் நன்மைகளைக் கருதுவாராயினர். 1824-இல், இவர், தம் தங்கை ஆரியட்டுடன் தம் ஊர்க்குத் திரும்பிவந்தார். அங்கு இவர் முன்அமைத்த ஆர்ட்போர்ட்டிலுள்ள பள்ளிக்கூடத்தில் ஆரியட் கல்வி பயிலத் துவங்கினர். இவர் சேர்ந்தபோது, அதில் இருபத்துநான்கு பிள்ளைகளிருந்தனர். பின்னர், அங்கிருந்த பிள்ளைகளின் தொகை நூற்றுக் கணக்காய்ப் பெருகியது!

அம்மையார், இப்பள்ளிக்கூடத்திற் படித்துக் கொண்டிருக்கையில், புல் என்னும் ஒரு பெருமாட்டி இவர்பாற் பேரன்பு கொண்டு இவரைத் தம் பிள்ளைபோற் பார்த்தார். ஒருகால், இவர் நோயாயிருந்தபோது, அவர் தமக்குச் செய்த அன்பு நிறைந்த பணியை ஏழு பிறப்பிலும், மறக்கமுடியாதென்று கூறினர். இப்பள்ளிக்கூடத்தில், ஆரியட் 'லத்தீன்' மொழியும், நன்றாகப்

பயின்று அம்மொழியிற் சில செய்யுட்களை மொழி பெயர்த்தார். இஃது, அப்பள்ளிக்கூடச் சிறப்புநாளொன்றில் பல்லார் முன்னிலையில் படிக்கப்பட்டது. இம் மொழிபெயர்ப்புச் செய்யுளின் திறன்கண்டு, எல்லாரும் அதனை உவந்து ஏற்றுக்கொண்டாடினர்கள். பின்பு அம்மையார் பெரிதும் முயன்று, பிரஞ்சு, இத்தாலியா முதலிய மொழிகளையும் பயின்றார்.

## 5. அம்மையார் தம் தமக்கையாரோடு பள்ளிக்கூடம் நிறுவுதல்.

ஆரியட்டின் தந்தையார், தங் குடும்பத்தோடு **போஸ்டன்** என்னும் ஊருக்குப் போய் அவ்விடத்தில் ஆறு ஆண்டுகள் இருந்தார். பின்னர், அவர்கள் சின்சினேட்டஸ் என்னும் பட்டணம் போய்ச் சேர்ந்தனர். இவர் தந்தையார் பீச்சர், அங்கே ஒரு கிறித்துவப் பள்ளிக்கூடத்திற்குத் தலைவராயமர்ந்தார். கேத்ரைன் அம்மையார், அந்நகரில் பெண்களுக்கென, 'மேற்றிசைப் பெண்கள் கல்லூரி' என்று ஓர் உயர்தரப் பள்ளிக்கூடம் நிறுவினர். இவரும், தம் தங்கை ஆரியட்டும் செய்த பெருமுயற்சிக் கேற்ப, அக்கல்லூரி மேன்மேற் பெருகிச் சிறந்த நிலைக்கு வருவதாயிற்று!

## 6. அம்மையார் வெளியூர் செல்லுதல்.

1833 ஆம் ஆண்டில், ஆரியட் அம்மையார், டல்டன் என்னும் பெருமாட்டியோடு **கென்தக்கி** என்னும் நகரத்திற்குச் சென்றார். அவர் அந்நாட்டிலுள்ள நீகிரோ வகுப்பினரின் அடிமை வாழ்வைப்பற்றித் தம் மனத்திற் கொண்டார். பல ஆண்டுகளுக்குப்பின், டல்டன் அம்மையார் இப்பயணத்தைப்பற்றி எழுதும்போது, "என்

னுடன் போந்த பீச்சர் அம்மையார், அடிமைகளின் வாழ்க்கையைப்பற்றி ஏதுந் தம் உள்ளத்தில் நினைத்த தாகத் தோன்றவில்லை; ஆனால் பிறகு, அவர் அதுபற்றித் தம் மனத்திற் பெருங்கவலை கொண்டாரென்பதை அறிந் தேன்; அந்நீகிரோவருடைய வாழ்க்கையிற் சிறிதும் உன்னிப்பில்லாதவர்போல் முதலிற் காணப்பட்டாராயி னும், பின்னர் அவரெழுதிய நீகிரோவரது வரலாற்று நூலில், அவ்வடிமைகளைப்பற்றிய ஒவ்வொரு முதன் மையான செய்தியுங் குறிக்கப்பட் டிருந்ததைக் கண்டு பெரிதும் வியப்படைந்தேன்," என்கின்றார்.

1834 இல், அம்மையார், அந்நகரத்தைவிட்டுக் கிழக்கு நோக்கிச் சென்று அங்கேயுள்ள இயற்கைக் காட்சிகளைக் கண்டு அவைகளைப்பற்றி மிக அழகாய் எழுதுகிறார். அங்கே ஓரிடத்தில் விழும், **நயகரா** என் னும் மலையருவியைக் குறித்து மிக நன்றாயெடுத்துக் கூறுகிறார். 'இம்மலை அருவியையும் அதனைச் சூழ்ந்துள்ள கண்கவரத்தக்க இயற்கையமைப்புக்களையுங் கண்டோர் அவற்றைப் படைத்த எல்லாம்வல்ல ஆண்டவனை மிகுதியாக நினைந்து வாழ்த்தி வணங்குகின்றனர்' என் கின்றார்.

## 7. அம்மையார்தம் மணவாழ்க்கை.

ஆரியட் அம்மையாரின் உயிர்த்தோழியும், ஸ்ட்டோ என்னும் ஆசிரியர் ஒருவரின் மனைவியுமான **இலைஜா** என்னும் மாது இறந்த செய்தியைக் கேட்டு, ஆரியட் சொல்லொணாத் துயருழந்தார். ஸ்ட்டோ ஆசிரியர்க்கு நெருங்கின உறவினர் வேறு எவருமில்லாமை கண்டு அம் மையார் வருந்தினார். அவர்பாற் கொண்ட பேரிரக்கத் தால், அவரை அம்மையாரே மணஞ்செய்துகொள்ள

உடன்பட்டார்! 1836ஆம் ஆண்டு ஜனவரி 6-ஆம் நாள் இவ்விருவர்க்கும் திருமணம் நடந்தேறியது. அம்மையார்க்கு மணமானபோது இருபத்தைந்து ஆண்டு. இவர் பெயர் திருமணத்தின் பின், ஆரியட் பீச்சர் ஸ்ட்டோ என்று வழங்குவதாயிற்று. அம்மையாரின் கணவரான ஸ்ட்டோ ஆசிரியர் கல்வியிற் சிறந்தாராதலோடு பல நல்ல இயற்கைகளும் நிரம்பப் பெற்றவர்.

தம் அருமை மனைவியார் போல், இவரும் உலகத்திற்கு உதவி செய்யும் இரக்கமான நெஞ்சத்தினர். இவர் கல்வியிற் றேர்ந்த பெரியாராகலான், இவரது இணக்கம் அம்மையார்க்குப் பெருமகிழ்வு தருவதாயிற்று. இவ்விருவரது கருத்தும் ஒன்றுகவே, இவர்கள் மாறுபடாமல் உலக நன்மைக்குப் பாடுபடுவாராயினர்.

இவர்கட்கு மணமான சில நாட்களுக்கெல்லாம், ஸ்ட்டோ ஆசிரியர், ஐரோப்பாவிலுள்ள கல்விச்சாலைகளில் நடைபெறும் சிறந்த முறைகளைத் தெரிந்து வருவதற்காக அந்நாட்டிற்கு அனுப்பப்பட்டார்.

1836 ஆம் ஆண்டில், அமெரிக்கா ஒரு புதிய நாடாயிருந்தது. அப்போதுதான் மக்கள் அங்குப் புதிதாய்க் குடியேறினார்கள். அங்கே அதுவரையில் அசட்டை செய்யப்பட்ட கல்வியானது, அம்மையாராலும் அவர் கணவராலுந் துவங்கப்பட்டது. அதனால், அங்கேயிருந்த தலைமையாளர்களிற் சிலர், உயர்தரக் கல்விப் பயிற்சி பெறுதற்பொருட்டு ஐரோப்பாவிற்குச் சென்றார்கள்.

## 8 அம்மையார் அடிமைகளின் விடுதலைக்காகப் பாடுபடுதல்.

அம்மையாரின் கணவனார் ஐரோப்பாவிற்குச் சென்றிருந்தபோது, துன்பவாழ்விற் கிடந்து தவிக்கும் அடிமைகளுக்கு நன்மைசெய்யத் துவங்கினார். அமெரிக்காவின் தென்பாதியில், அடிமைகளை மிகவுங் கொடுமையாக நடத்தினார்கள்.

சின்சினேட்டை என்னும் மாகாணத்தில் நடக்கிற அடிமை வாணிபத்தை நிறுத்த வேண்டுமென்று பலர் முன் வந்தனர். நீகிரோவருடைய கொடிய அடிமை வாழ்வை ஒழித்து, அவர்கட்கு உரிமை தரவேண்டுமென்று அறிவுடையோர் பலர் பெருங் கிளர்ச்சி செய்தனர். இந்நன்முயற்சி நாளுக்கு நாள் உரம் பெறுவதாயிற்று.

பெருஞ்செல்வர்கள், அடிமைகளுக்குச் செய்யுங் கொடுமைகளைச் செய்தித் தாள்களில் எழுதி வெளியிட்டார். இதைக் கண்ட செல்வர்கள் பெருஞ் சீற்றங் கொண்டு, கொடியோர் சிலர்க்குப் பொருள் கொடுத்து, இதழ்கள் வெளியிடுவோரை எதிர்க்குமாறு செய்தனர். எங்குப் பார்த்தாலும் பெரிய கலாம் விளைந்தது! அதை அடக்கப் பெருமுயற்சி எடுக்கப்பட்டது. 'இக்காலங்களில், அடிமைகள் அங்குமிங்குமாகத் தவித்துப்பட்ட கொடுந் துன்பங்களைப்பற்றி எடுத்துப் பேசினால், அறிவுடையோர்க்கு உள்ளம் நடுங்கும்; சினம் பெருகும்' என்றார் அம்மையார்.

## 9. மக்கட்பேறு

ஸ்டோ ஆசிரியர், நியூயார்க் திரும்பி வந்தபோது, இலைஜா, ஆரியட் என்னும் இரண்டு பெண் குழந்தை

கள் தமக்கு இரட்டைப் பிள்ளைகளாகப் பிறந்த செய்தி கேட்டுப் பெருமகிழ் வடைந்தார். 1838-இல் ஹென்ரி என்னும் மற்றோர் ஆண் குழந்தையும் பிறந்தது. ஸ்டோ அம்மையார், முன்போல், தம் மனம்போன வாறு படிக்கவும் எழுதவும் முடியவில்லை. ஒரே காலத் தில், அம்மையார்க்கு மூன்று கைக் குழந்தைகள் இருந் தன. அவர் உடல் மிக மென்மையுடையதாகும். இவர், பணமிகுதியாக இல்லாதவராகலான், தந்நலத்திற்காக, வேலைக்காரர்களைப் போதுமான அளவுக்கு வைத்துக் கொள்ளக் கூடவில்லை. ஒரு வேலைக்காரியை வைத்துக் கொண்டு, அம்மையார் தாமே குழந்தைகளையும் வீட்டு வேலைகளையும் பார்த்து வரலாயினர். இவ்வளவு குடும் பத் தொல்லைகளுக்குமிடையே அம்மையார், செய்தித் தாள்களுக்கும், பல இதழ்களுக்குங் கட்டுரைகள் எழுதி வரலாயினர். இதனால், அம்மையார்க்குக் கிடைத்த பொருள் சிறிதாயினும், அவர் அதனை மகிழ்வோடு பெற்றுக்கொண்டார். இக்காலத்தில், ஸ்டோ அம்மையார், தம் பெண் நண்பர் ஒருவர்க்கு எழுதிய கடிதத்தில் "என் நண்புடையாய் குழந்தைகளைப் பாதுகாப்பதும், வீட்டு வேலைகளைப் பார்ப்பதுந் தவிர, வேறு வேலை ஏதுஞ் செய்ய எனக்கு நேரமில்லை; நினைத்துப் பார்க்கும்போது, என் அருமைக் கணவனு ருங் குழந்தைகளுமே யான் பெற்ற பெரும்பேறுகளா கும்; இப்பேறு கிடைத்த யான் நல்லூழ் உடையவ ளென்றே சொல்லல் வேண்டும். இக்குழந்தைகளில்லா விட்டால் எனக்கு எவ்வளவு பெருவாழ்வு கிடைத்தா லும், ஒழிவு கிடைத்தாலும் எனக்கு அவை சிறந்தன வாகா. குழந்தைகள் வட்டிக்குப் போட்டு வைத்திருக் கிற பெருஞ் செல்வமாகும்," என்கிறார்.

1839-ஆம் ஆண்டில் ஸ்ட்டோ அம்மையார் வீட்டில், ஒரு நீகிரோ பெண் வேலையாளாய் அமர்ந்தாள். அவள் வந்த சில திங்களுக்கெல்லாம், அவள், தன் அடிமையென்று ஒருவன், அவளைத் தேடிப் பிடித்துக்கொண்டு போக அவ்வூர்க்கு வந்திருக்கிறனென்ற செய்தி அறிந்தார். அப்பெண்ணைத் தேடித் திரிகிறவன் அவ்வூரை விட்டு ஒழியும் வரை, அவளை ஒரு மூடு வண்டியிலேற்றித் தாமும் தம் மைத்துனரும் காவலாகப் புறப்பட்டுப் பன்னிரண்டு கல் தொலைவிலுள்ள நேயர் ஒருவரிடம் பத்திரமாக விட்டுவந்தனர். பின், 1840-ஆம் ஆண்டில் அம்மையார்க்குப் பிரடெரிக் வில்லியம் என்னும் மற்றோர் ஆண்மகவு பிறந்தது. இக்காலத்தில் இவர்க்குக் கண்ணில் நோய் ஏற்பட்டு இரண்டு திங்கள் வரை படிக்கவும் எழுதவும் முடியாமலிருந்தார். எதையும் ஊன்றிப் பார்க்க இயலாதிருந்தார். அம்மையாரின் உடல் அடிக்கடி நலங் கெடுவதால், 1842-ஆம் ஆண்டில், வெளியூர்க்குப் புறப்பட்டுப் போனார். அப்போது அவர் கணவனார், "என் அருமை மனைவியே! நீ ஒரு நூலாசிரியையாகப் போகிறாய், ஆண்டவனருள் அவ்வாறமைந்திருக்கிறது; ஆகலான், அதற்கேற்றவாறு நீ எல்லா ஏற்பாடுகளும் செய்வாயாக; விரைவில் உன் உடலை நலப்படுத்திக் கொள்; நம் மக்களுக்கு அதுவே பெரும் பேறாகும்," என்று எழுதினார். இன்னொரு கடிதத்தில் 'நீ விரைந்து இங்கு வந்து சேர்வாயாக; உன்பிரிவு எனக்குத் துன்பந் தருகிறது; பொருள்முட்டுப்பாட்டால் உன்னிடம் வர முடியவில்லை; உன்னைப் போன்ற அறிவுள்ள பெண்மணியைக் காண்பதரிது; செருக்கும் வீண் ஆரவாரமுஞ் சிறிதும் உனக்கில்லை; கடுஞ்சொல் இல்லாமற் பேசுந்திறனும் உன்பாலமைந்துளது; சிறந்த குணங்களுக்கெல்லாம் நீ

தான் உறைவிடமாவாய்' என்று தம் அன்பு கரையிகந்து பெருகத் தம் மனைவியார்க்கு எழுதினார்.

இக்கடிதத்திற்கு, ஸ்ட்டோ அம்மையார், தங் கணவர்க்கு, "நீ சிறந்த நூலாசிரியையாக வேண்டும் என்று எழுதினீர்கள். அதற்கென்று பெரு முயற்சி எடுத்தால், நூலாசிரியையாதற்கு ஐயுறவில்லை. ஆனால், அந்நிலை எனக்குக் கிடைக்குமா? என்று ஐயுறுகின்றேன். ஏனெனில், நம் அருமைப் பிள்ளைகளெல்லாரும் மிகச் சிறு குழந்தைகள். தாயாகிய யான் அவைகளைப் பாதுகாப்பதிலேயே, கண்ணுங் கருத்துமா யிருக்கவேண்டியவளா யிருக்கின்றேன். அதுவுமல்லாமல், நூல்களெழுத வேண்டுமானால், அதற்கென எனக்குத் தனியாக ஓர் அறை வேண்டும், அதுவுமில்லை. என் செய்வது?" என்றெழுதுகிறார். இதற்கேற்றவாறு அம்மையார்க்குச் சிலகாலம் வரை, வறுமையோடு உடல் நலமின்மையுஞ் சேர்ந்து வருத்துவதாயிற்று!

1842-ஆம் ஆண்டில், அங்குள்ள கல்விச்சாலை மாணாக்கர்களுக்கெல்லாம் நச்சுக் காய்ச்சல் உண்டாயிற்று. இரக்கமே ஒரு வடிவாயமைந்த அம்மையார், தம் துன்பத்தையும் பொருட்படுத்தாது, அவர்களுக்கெல்லாம் மருந்து கொடுத் துதவிவந்தார். 1843-ஆம் ஆண்டில் ஓராண் மகவும், பிறிதொரு பெண்மகவும் பிறந்தன. நோயும், வறுமையும் அம்மையாரை மிகவும் வருத்தின. நாளடைவில் அம்மையார் உடல் மிகவும் மெலிந்தது! ஆகலான் மறுபடியும் அவர் வெளியூர்க்குப் போகவேண்டியவரானார். அம்மையார், வெளியூரிலிருந்து தம் நேயர் ஒருவர்க்கு, "எனக்கு மிகுதியான துன்பங்களிருக்கும் போது, எல்லாம்வல்ல இறைவன், என்மீது இரக்கங் கொண்டு, சிறந்த அன்பர்கள் சிலரை என்னிடம் வரச்

செய்து அவர்கள் எனக்குப் பேருதவிகள் செய்யுமாறு செய்த அவனருளை நினைக்கநினைக்க எனக்குப்பேரின்பம் பெருகுகின்றது! அவனருளால், எப்பொழுதும் இரண்டொரு நேயர்களிருந்து எனக்கு வேண்டியவைகளைச் செய்து என்னை மகிழ்விக்கின்றார்கள். ஆகலான், எனக்கொரு குறைவுந்தோன்றவில்லை! என் அருமைக் கணவனாரும் வீட்டுக்காரியங்களிற் கருத்தும் பிள்ளைகளைப் பாதுகாப்பதில் பேரூக்கமுங்கொண்டார். அவர் மூக்குக் கண்ணாடியுடன் குழந்தைகளைப் படுக்கை அறைக்கு அழைத்துக்கொண்டுபோய்ப் படுக்கவைக்கும் காட்சி மிக நன்றாயிருக்கும். யான் உடல் நலமில்லாமல் வெளியூருக்குப் புறப்படும்போது பேர் ஊர் தெரியாத யாரோ ஒரு நண்பர், என் பயணத்திற்கு வேண்டிய பொருளை வியக்கத்தக்கவாறு அனுப்பினார்! இவையெல்லாம் நினைத்துப்பார்த்தால், எல்லாம் வல்ல ஆண்டவன் நம்மிடத்து அளவிலா அருளிரக்க முடையவனாயிருக்கிறானென்பது நன்கு விளங்குகின்றது. இதனால், நமக்கு அவனருளும் நிலை கண்டு, அவனை எக்காலமும் நம்பியிருப்பதற்குப் பெருந்துணிவு ஏற்படுகிறது," என்று எழுதினார்.

இவ்வாறு, உடல் நலத்தின்பொருட்டுப் போயிருந்த இடத்தினின்றும், சில திங்கள் கழித்து நலமாக அம்மையார் தம் வீடுவந்து சேர்ந்தார். மக்களும் அவர் கணவனாரும் பெருங்களிப்படைந்தனர்.

1848-ஆம் ஆண்டில் அம்மையார்க்குச் சாமுவேல் என்ற ஆறாவது ஆண்மகவு பிறந்தது. இக்காலத்தில், அவர் கணவனார் ஸ்டோ ஆசிரியரின் உடல்நலங் குன்றி வருவதாயிற்று. அவர் மிகவும் மெலிந்தார். அதனால், அவர் நல்ல காற்றுந் தண்ணீருமுள்ள இடத்திற்குப்

போய் உடல் நலம் பெற வேண்டியவரானார். ஓராண்டுவரை இவர் வெளியூரில் இருக்க நேரிட்டது.

ஸ்டௌ ஆசிரியர் வெளியூர் போயிருந்த காலத்தில், சின்சினேட் நகரத்தில், கக்கற்கழிச்சல (வாந்திபேதி) நோய் மிகுதியாய் உண்டாயிற்று. அது கேட்ட ஸ்டௌ அவர்கள் உடனே தம் மனைவி மக்களிடம் போய்விட வேண்டுமென்று ஆவல் கொண்டார். ஆனால் அவர் உடல் நலம்பெறுதல் வேண்டுமென்னும் எண்ணத்தால் அவர் அங்குவர அம்மையார் உடன்படவில்லை. இவ்வாறிருக்க, அம்மையாரின், சிறுகுழந்தையான சார்லிக்குக் கக்கற் கழிச்சல் ஏற்பட்டது. அதனால் குழந்தை பிழைக்குமென்ற நம்பிக்கை தோன்றவில்லை. அப்போது அம்மையார் தங் கணவனார்க்கு, "முடிவாகக் கூற்றுவன் நங்குடும்பத்திற்கும் வருகிறான்போல் தோன்றுகிறது. இன்றிரவு, அந்நோயால் நம் குழந்தை தப்புவதற்கு வழியில்லை. என் பக்கத்திலுள்ளார் எவ்வளவோ உதவி செய்து வருகின்றார்கள். இத்தொத்துநோய் மிகவிரைவிற் பரவிப் பெருங்கெடுதி செய்வதாகக் கூறுகின்றார்கள். தாங்கள் இதற்காக இங்கு வரவேண்டா. நீங்கள் இவ்விடம் வருவதற்குள் எல்லாக் காரியங்களும் முடிந்துவிடும். கடவுள் நம்மைக் கைவிடமாட்டார்," என்றெழுதினார். இதற்கு அடுத்த கடிதத்தில், " நம் அருமைக் குழவி நம்மை விட்டுப் பிரிந்தது ! நம் மனத் துயரம் ஆற்றொணாததா யிருக்கின்றது ! எனக்கு எத்தனையோ துன்பங்கள் ஏற்படினும், அக்குழந்தையின் அழகிய மலர்ந்த முகத்தைக் கண்டதும், அவைகளை உடனே மறந்து விடுவேன் ! அப்படிப்பட்ட நம் அருமை மகவு இறக்கும் நிலையிலிருந்ததை என்னாற் பார்க்க முடியவில்லை ! அப்போது, எனக்கேதுஞ் செய்த்

தோன்றவில்லை. அந்நேரத்தில் அக்குழந்தை துடித்துத் துன்புறுவதைப் பார்க்கிலும், அது விரைவில் இறந்து விடுதல் மேலென்று அங்குள்ளார் நினைக்கும்படியா யிற்று! யானடைந்த இத்துன்பம், இப்பெரிய நகரில், பெரும்பாலும் ஒவ்வொரு வீட்டிலுமிருப்பதாகத் தெரிகிறது! இஃது எப்பொழுது நீங்குமோ கடவுள்தான் அறிவர்!" என்றெழுதினர்.

இவ்வாறு நீண்ட நாள், அந்நாட்டுமக்களை வருத்திய அக்கொள்ளை நோய் நாளடைவில் ஒய்ந்தது. 1849-ஆம் ஆண்டில் ஸ்டோ ஆசிரியர் தம் ஊர்க்குத் திரும்பி வந்தார். வந்தவுடனே அவர் அவ்வூர்க் கல்லூரியில் தலைமை ஆசிரியராக அமர்த்தப்பட்டார்.

## 10. அம்மையார் அடிமைகளுக்காகப் பாடுபடல்

அம்மையார், ஒப்பில்லாத அறிவும் அன்புமுடைய மாதராரென்று அவரைச் சூழ இருந்தவர்கள் அவரைப் புகழ்ந்தார்கள். இவ்வளவு குடும்பத் தொல்லைகளுக்கிடையே, அம்மையார், பல அரிய கதைகளுங் கட்டுரைகளுஞ் செய்தித்தாள்களுக்கு எழுதிவந்தாராயினும், அவருடைய பெயர் வெளியில் சிறப்பாக வரவில்லை.

1850-ஆம் ஆண்டு அம்மாகாணத்தில், அங்கங்கே அஞ்சிப் பதுங்கிக் கொண்டிருந்த அடிமைகளுக்காக ஒரு சட்டம் ஏற்படுத்தப்பட்டது. அச்சட்டத்தினுல் நீகிரோவர்களுக்குண்டான கொடுந்துன்பங்களுக்கு ஓர் அளவேயில்லை! தெற்கே, அடிமைகளை வாங்கி வைத்தாளுகின்றவர்கள், அவ்வேழை அடிமைகளைத் தம் மனம் போனவாறு நடத்தலாம்; அவர்கள் தப்பி ஓடிவிட்டால் அவர்களைப் பிடித்து அவர்கள் விருப்பம் போல் அவர்களை நடத்தலாமென்று அச்சட்டங் கூறியது! அம்மையார், பாஸ்டன் நகரத்திலிருந்தபோது'

அங்கே இந்தக் கொடிய சட்டத்தைப்பற்றிய பேச்சே எங்கும் பேசப்பட்டது; அம்மையார், பிரான்ஸ்விக் நகரத்திற்கு வந்தபிறகு, உதவியற்ற எளிய மக்களான நீகிரோவரைத் துன்புறுத்துமாறு இப்படி ஒரு கொடிய சட்டம் உண்டாகுமா என்று, மனங் கொதித்து வருந்தினார்! இச்சட்டம் நிறைவேறிவிட்டபடியால், தப்பித்துக்கொண்டுவந்த அடிமைகளை நகரங்களிற் பிடித்தார்கள். பாஸ்டன் நகரிலும் கேள்வியின்றி நீகிரோவர் கைப்பற்றப்பட்டனர். அதனால், அவர்கட்குண்டான துன்பங்களையும் வருத்தங்களையுஞ் சொல்லி முடியா. மற்றக் குடும்பங்களும், இக்கலகத்தாற் பெரிதும் அல்லற்பட்டன. அடிமைகளிற் சிலர், பயனற்ற பொருள்களை அடைத்திருக்கும் அழுக்கிடங்களில் ஒளித்துக்கொண்டனர்! சிலர் நிலவறையில் மறைந்திருந்தனர்! சிலர் கடற்கரைக்கு ஓடிக் கப்பலேறி ஐரோப்பாவிற்குப் போயினர். சிலர் கனடாவிற்குச் சென்றனர். நீகிரோ ஏழைப் பையனொருவன், மண் ஏனங்கள் விற்றுத் தன் குடும்பத்தை நடத்தி வந்தான். அவனை விலைக்கு வாங்கின இரக்கமில்லாத தலைவன் ஒருவன் அவனைத் தேடிக்கொண்டு வருவதாக அவன் அறிந்தான். அக்கொடிய தலைவனை விட்டுப் பிரிந்து பல ஆண்டுகள் கழிந்தன. இவன் தேடிவந்த காலம் மழைகாலம். அப்பையன் வண்டியிலேறிப் போனால், தேடிவந்தவன் கண்டு பிடித்துவிடுவானோ என்று அஞ்சிக் கால் நடையாக நடந்து, கனடா நாட்டுக்குப் போகப் புறப்பட்டான். அப்படிப் போகும்போது, அவனுடைய கால்களிரண்டும் பனி பொறுக்க முடியாமல் வெடித்துத் தீராப் புண்களுண்டாயின! முடிவில் அவனுடைய இரண்டு கால்களும் வெட்டி எடுக்கப்பட்டன.

இப்படிப்பட்ட கொடுமைகளை, எட்வர்ட் பீச்சர் என்னும் பெருமாட்டி,ஸ்டடோ அம்மையாரின் மகளார் ஒருவர்க்கு, "இப்பொழுது அடிமைகளைப்பற்றி நடக்கிற கொடிய செய்கைகளைக் கேட்டால் எப்படிப்பட்டவர்க்கும் மிக்க சினமுண்டாகும்; ஆனால், நான் என்ன செய்யக்கூடும்? என்னாற் கூடியவரை நினைத்துப் பார்த்தேன். ஒன்றுஞ் செய்யத் தோன்றவில்லை. அதை முடிக்கத் தக்கவர் உன் அன்னையேயாவர். அவரைப் போல் எழுதும் ஆற்றல் கடவுளருளால் எனக்கு இருக்குமானால், இக்கொடிய அடிமை வாணிபத்தைப்போன்ற கொடுஞ் செயல் வேறில்லை என்பதை உலகத்தார் அனைவரும் உணருமாறு எழுதுவேன்," என்றெழுதினர்.

இக்கடிதம், அம்மையார் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கையில் வந்து சேர்ந்தது. ஸ்டடோ அம்மையார் அதைப் பார்த்தவுடனே, நாற்காலியினின்றும் நிமிர்ந்தெழுந்து பேராவலோடு, 'அவ்வாறே நான் எழுதுவேன், நான் உயிரோடிருக்க ஆண்டவன் அருள்புரிவானானால், அடிமை வாணிபத்தை எதிர்த்து எழுதி முடிப்பேன்' என்று கூறினர். 1850-ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்களில், அம்மையார், "என் பெண் நண்பர் ஒருவர் எழுதிய கடிதத்திற்கு விரைந்து விடை எழுதுவேன்; இரவில் குழந்தை என் பக்கத்திற் படுத்துத் தூங்கும்வரை யான் ஏதொன்றுஞ் செய்ய இயலாது; எதையும் அஃது உறங்கிய பிறகுதான் செய்கிறேன்," என்று இன்னொருவர்க் கெழுதினர்.

1851-ஆம் ஆண்டில் ஸ்டடோ அம்மையார், ஒரு கோயிலில் உட்கார்ந்திருந்தபோது, திடீரென நீகிரோ ஒருவனின் மிகக் கொடிய இறப்புக் காட்சியை நினைக்குமாறு நேரிட்டது! உடனே அம்மையார் அவ்விடத்தை

விட்டெழுந்து வீட்டுக்கு வந்தார். வந்து கடிதமும் எழுதுகோலும் எடுத்துக்கொண்டு, அடிமைகளின் பெருந்துன்பங்களை முறையாக நன்கு விளக்கி எழுதத் துவங்கினார். இவர் தம் குழந்தைகளைச் சூழவைத்துக் கொண்டு அடிமைத் தொழிலைப்பற்றித் தாமெழுத நினைத்தவைகளை அவர்களுக்குச் சொன்னார். இவை களைக் கேட்டதும், பத்தாண்டும், பன்னிரண்டாண்டு முள்ள குழந்தைகள் ஏங்கி அழத் துவங்கினர்! இப்படி அழுதுகொண்டே, ஒரு குழந்தை, "அம்மா! உலகில் அடிமைப்படுவது மிகக் கொடுமை!" என்றது. 'பிள்ளை களே, ஒவ்வொரு நாளிரவும், உங்கள் பக்கத்தே படுத் திருக்கும்போது, அடிமைகளாகப் போயிருக்கும் தாய் மார்களை நினைத்து நினைத்துக் கண்ணீர்விட்டு வருந்து கின்றேன்' என்று ஸ்டோ அம்மையார் கூறினார்.

## 11. அம்மையார் அடிமைகளின் வரலாறு எழுதுதல்

1851-ஆம் ஆண்டில், அம்மையார், நீகிரோவருடைய வரலாற்றைக், கடவுளை வணங்கி மிக்க உழைப்போடு எழுதத் துவங்கினார். இப்புத்தகம் முடிவதற்கு ஓராண் டாயிற்று. அதில், அடிமைகளின் சொல்லொணுக் கொடிய வாழ்க்கை வரலாறுகளை மிக நன்ருகவும், மக்களின் மன உணர்ச்சியை எழுப்பத் தக்கவாறும் எழுதினார். இன்னும் நண்பர்கள் பலர், அவ்வரலாறு களைப்பற்றிப் பற்பல குறிப்புக்களும் செய்திகளும் அம் மையார்க்கு எழுதி அனுப்பினார்கள். அவரை ஊக்கப் படுத்திப் பல கடிதங்கள் வந்தன. ஆகலான், அம்மையார், அப்புத்தகத்தைப் பொருளாழமுள்ளதாகவும் மிக நேர்த்தியாகவும், உலகத்தார் மிகவுங் கொண்டாடி

ஏற்கத்தக்க நிலையிலும் எழுதி முடித்தார்! முடித்து, 'இதனை யான் எழுதி முடித்தேனல்லேன்; இப்புத்த கத்தை முடித்த பெருமை எல்லாம் வல்ல கடவுளுக்கே உரியதாகும்' என்றார். எதற்கும் நான், நானென்று பேசும் செருக்கிலலாத் தூய மனத்தையுடையவர் ஸ்டோ அம்மையார்.

## 12. அடிமைகட்கு நல்ல காலம்

எல்லாம் ஆண்டவனருளாலே நடக்கின்ற தென்னும் உயர்ந்த நம்பிக்கை உடையவராகலான், அம்மையார், அப்புத்தகத்தால் வரும ஊதியத்தைப் பற்றி ஏதும் நினைத்தாரல்லர். இப்புத்தகம் வெளியான அன்றைக்கே மூவாயிரம் படிகள் செலவாயின! உடனே மறு பதிப்பு வெளியாயிற்று. இவர் புத்தகததைப் படிப்போர் உள்ளத்தில அடிமைகளைப்பற்றிய துன்பம் பசுமரத்தாணிபோல் பதிவதாயிற்று! எங்குப் பார்த்தாலும் அம்மையார் புத்தகம் படிக்கப்பட்டது! மூன்றும் பதிப்பும் வெளிவந்தது! ஓராண்டுக்குள் 120 பதிப்புக்கள் வெளியாயின! அடிமைகளை விடுவித்துவிடவேண்டுமென்று அறிவுடையோர் பலர் முன்வந்தனர். பல கூட்டங்கள் கூடின. நாடெங்கணும், நகரெங்கணும் பெருங்கிளர்ச்சி. மிகவிரைவில், வறுமை மிக்க ஸ்டோ அம்மையாரின் பெயர் உலகமெங்கணும பரவியது: புகழ்பெற்றது! அவரது ஒவ்வொரு சொல்லும் மேற்கோளாக எடுத்தாளப்பட்டது. அவர் அத்தனை காலமாகப்பட்ட வறுமைத் துன்பங்களெல்லாம் இறைவனருளால் அறவே ஒழிந்தன! இப்புத்தகம் வெளியான நான்கு திங்களுக்குள், அம்மையார்க்கு இருபத்தையாயிரம் ரூபா கிடைத்தது! மக்கள் கணக்கின்றி இவரைப்

புகழ்ந்தார்கள். அமெரிக்காவில், அடிமைகளை வாங்கி வைத்திருந்தவர்கள் பலர் அம்மையாரிடம் பெருஞ் சீற்றங் கொண்டார்கள்! இதற்கெல்லாம் இவர் அஞ்சவில்லை. 1853-ஆம் ஆண்டில் இவர் தாமெழுதிய அந்நூலுக்கு விளக்க உரை எழுதினார்.

## 13. அம்மையார் வெளியூர்க்குப் புறப்படுதல்

ஸ்காத்லாந்து நாட்டில் கிளாஸ்கோ நகரத்தில், அடிமைகளின் விடுதலைக்காக ஒரு கழகம் ஏற்படுத்த வேண்டுமென்றும், அதற்காக ஸ்டோ அம்மையார் வரவேண்டுமென்றும் அங்குள்ளோர் அவரை வேண்டி அழைத்தனர். இதற்கிணங்கி, அம்மையார் தம் கணவனாரின் உடன்பிறந்தார் ஒருவருடன் புறப்பட்டார். இந் நேரத்தில் இலண்டன் நகரத்தில், இவர்தம் நேயரான பாலன் என்னும் பெருமாட்டியாரிடமிருந்து நீகிரோ வரது வரலாற்றைத் தமக்கு விரிவாக எழுதுமாறு கடிதம் வந்தது. அதற்கு, அவர் விரும்பியவாறே தெளிவான நீண்ட கடிதம் எழுதி அனுப்பினார்.

பின்னர், அம்மையார் இங்கிலாந்திற்குச் சென்றார். அங்கே இவர்க்கு நடந்த அருமை பெருமைகள் இவ்வளவெனச் சொல்லி முடியா. அங்குத் தமக்கு நடந்த சிறந்த வரவேற்புகளைக் கண்டு அம்மையார் மிக வியந்தார்! இங்கிலாந்தில், அங்கங்கே பேரவைகள் கூட்டி அவைகளில் அடிமைகளின் நிலைகளைப் பற்றி அம்மையார் பேசப் போகின்றார் என்னும் பேச்சு எங்கே பார்த்தாலும் பேசப்பட்டது. இவரது விரிவுரையை மக்களெல்லாரும் கேட்கப் பெருங்கூட்டமாகத் திரண்டு பேராவலோடு கூடினர்!

அடிமைகளின் உரிமை வாழ்வின் பொருட்டுப் பேருழைப்பெடுக்கும் உதவிக்காக, ஸ்காத்லாந்தில் ஒரு கழகம் நிறுவி, அதில், ஆயிரம் பவுன் சேர்த்து அம்மையார்க்குக் கொடுக்கப்பட்டது. இவ்வாறு, உதவிப் பொருள் சேர்த்தற் பொருட்டு, ஒரு கல்லூரியில் பெரிய கூட்டம் கூடினபோது, அங்கேயிருந்த கண்ணில்லா ஒரு முதியோளைப் பார்த்து, 'இவள் ஒருத்திதான் இக்கழகத்திற்காகப் பொருள் தரமாட்டாள் போலும்! ஏனெனில், அவள் ஸ்ட்டோ அம்மையார் எழுதிய அருமையான புத்தகத்தைப் படிக்க அவட்குக் கண்ணில்லையே' என்று பேசினார்கள். இதுகேட்ட அவள், 'யான் படிக்கக் கண்ணில்லை; ஆனாலும், அப்புத்தகத்தை என் மகன் படிக்கக் கேட்டு மிகவுங் களிப்படைந்தேன். இதோ என் கையொப்பத்தொகை இருக்கிறது' என்றாளாம். இவ்வாறு, அந்நாட்டினரெல்லாரும் அம்மையாரை மிகவும் பாராட்டினார்கள். நம் அருமை விக்டோரியா அரசியாரும் அம்மையாரை நேரிற் கண்டு, அடிமைகளின் பொல்லா வாழ்விற்காக மிக வருந்திப் பேசி, அவரைப் பெருமைப் படுத்தினர். இப்பெருஞ் சிறப்புக்களினால் ஸ்ட்டோ அம்மையார் சிறிதுஞ் செருக்கடையவில்லை. மிக்க அடக்கமும் பணிவுமுடையவராகவே யிருந்தார்.

பிறகு, ஸ்ட்டோ அம்மையார் இங்கிலாந்து தீவுகளை விட்டு, ஐரோப்பாவிற்குச் சென்றார். அங்குள்ள பல இடங்களுக்குஞ் சென்று, எல்லாரும் மனத்திற்கொள்ளுமாறு அடிமைகளைப்பற்றி மிகத் தெளிவாகப் பேசினர். மக்களனைவரும் அவர்க்கு வேண்டியபடி பொருளுதவி செய்தனுப்பினார்கள். பிறகு 1857-ஆம் ஆண்டில் இரண்டாம் முறையாக, அடிமைகளுக்கு நேர்ந்த இடுக்கண்

களையும், முறைகேடான கட்டுப்பாடுகளையும் விரிவாக விளக்கி ஒரு புத்தகம் எழுதினார்.

அம்மையார் பல நாடுகளுக்குச் சென்று, பின் அமெரிக்காவை அடைந்தார். அப்போது, அமெரிக்காவில் அடிமைகளுக்கு உரிமை வாழ்வு தரவேண்டுமென்னும் முயற்சி அங்கு மிகுதியாய் நடைபெறுவது கண்டு பெருமகிழ்வடைந்தார்.

## 14. அம்மையாரின் மகன் ஒருவரின் இறப்பு

இவ்வாறு, அம்மையார் கவலையற்று உலக நன்மையில் ஈடுபட்டிருக்கும் காலத்தில், ஹென்ரி என்னும் இவர் மகனொருவர், தம் பள்ளிக்கூடத்தருகிலுள்ள ஓர் ஆற்றில் குளிக்கும்போது மூழ்கி இறந்து போனார். இவ் வெதிர்பாராத மகனாரின் சாக்காடு அம்மையார்க்குத் தாங்கொணாத் துன்பந் தருவதாயிற்று!

## 15. அமெரிக்காவில் வடபகுதி தென்பகுதியிலுள்ளார்க்குப் போர்

1860-ஆம் ஆண்டில் அமெரிக்காவில், அதன் வடபகுதியார்க்கும் தென்பகுதியார்க்கும் பெரும்போர் துவங்கியது. இதைப்பற்றி ஸ்டோ அம்மையார் எழுதுவதாவது:—

"அமெரிக்க நாட்டினர், அடிமைகளுக்குச் செய்த கொடுமைகளுக்குத் தக்க ஒறுத்தலாக ஆண்டவனருளால் இந்தப் போர் ஏற்பட்டது. தென் பகுதியினர் அடிமைகளை வாங்கி, அவர்களை மிகவுந் துன்புறுத்திப் பொருள் தேடுகிறபோது, வடபகுதியினரும் அவர்கட்கு உதவியாயிருந்தமையினாலேயே, அவர்கள் தொகுத்த பொருளையெல்லாம் போருக்கு வரியாகக் கொடுக்கும்படி

யாயிற்று. பல ஆண்டுகளாக, நீகிரோ ஏழைமக்களை வருத்தித் துன்புறுத்தியதற்காக, அந்நாட்டிற், பலர் போரில் உயிர் இழந்தனர்! அவ்வடிமைப் பிள்ளைகளின், தாய்மார் கண்ணீர்விட் டழுததை எவரும் பொருளாக நினையாமையினால், அவர்களைப் போலவே, அந் நாட்டுப் பெண்டிர், கூட்டங் கூட்டமாகக் கண்ணீர்விட் டழும்படியாயிற்று. அடிமைகளல்லாத உரிமை பெற்ற நாடுகளில் இருந்தவர்களும், அடிமைகளின் துன்பத் தைக் கேளாமலிருந்ததற்காக அவர்களும் பல துன்பங் களை அடைவாராயினர்," என்று எழுதினார். இப்போரி னால், உண்டான கொடுமையை ஸ்டோ அம்மையார் தாம் நேரே கண்டனராகலான், இவ்வாறு எழுதினார்.

ப்ரெட்ரிக் என்ற அம்மையார் தம் மகனாரும் இந் தப் போரில் வேண்டுமெனச் சேர்ந்து கொண்டார். அப்போரில் அவருக்குத் தலையில் கொடிய காயம் ஏற் பட்டது. புண் ஒருவாறு ஆறிய போதினும், அவருக்கு உடல் முன்போல் நலமடையவில்லை. இப்போர் முடிந்தபின், நல்ல காற்றுள்ள இடத்திற் போயிருந்தால், தம் மகன் உடல் நலமாகுமென்றெண் ணிப் பிளாரிடா என்னும் ஊரில் ஒரு பெரிய இடம் வாங்கினார். அவ்விடத்தில் அவர் பல ஆண்டுகளிருந் தார். பிறகு அங்கிருப்பதைவிடக் கடற்பயணம் இசையுமென்று கருதி நியூயார்க் முதலான பல இடங் களுக்குச் சென்றார். முடிவில் அவர் எங்குச் சென்றா ரென்ற செய்தி ஒன்றுந் தெரியவில்லை. அவர்நிலை என் னாயிற்றோ என்று அம்மையார் எப்போதும் மனதில் வருத்தங் கொண்டவராயிருந்தார்!

## 16. அடிமைகள் உரிமை வாழ்வு பெறுதல்

ஸ்ட்டோ அம்மையார் பல ஆண்டுகளாகச் செய்து வந்த பெருமுயற்சியின் பயனைப் பலரும் எதிர்பார்த்த படி, அமெரிக்க வடபகுதியார்க்குக் கடவுளருளால் வெற்றியுண்டாகி அடிமைகளெல்லாரும் உரிமை வாழ்வு அடையுமாறு கட்டளை பிறந்தது!

ஸ்ட்டோ அம்மையார் தங் குடும்பத்தோடு, தாம் முன் பிளாரிடாவில் வாங்கின பெரிய வீட்டிற்குச் சென்றார். இவ்வூர், கடல் நீரும் ஆற்று நீரும் பாய்கிற செழிப்பான நாடு; அங்கே நாரத்தம் பழத் தோப்புகள் மிகுதி; சூடான இடமானாலும் குளிர்ந்த கடற்காற்று வீசுவதால் மிகவுங் குளிர்ச்சியாயிருக்கும்! அம்மையார் அவ்வூர் போய்ச் சேர்ந்தவுடனே, அங்கு விடுதலைபெற்ற அடிமைகள் கூட்டங் கூட்டமாகக் குடியேறினார்கள். இவர்கட்குக் கல்விக் கண்ணைத் திறந்துவைக்கப் பேரா வல் கொண்டார். அதற்காக வேண்டும் ஏற்பாடுகளுஞ் செய்தார்.

## 17. மாண்டரினில் பள்ளிக்கூடம் அமைத்தல்

1867-ஆம் ஆண்டில் ஸ்ட்டோ அம்மையார், மாண் டரினுக்கு அருகே ஓரழகிய இடத்தில் வீடு வாங்கினார். செயின்ட் ஜான்ஸ் என்னும் ஓர் அழகிய ஆற்றங்கரை யோரத்தில், பழமரங்கள் நிறைந்த தோட்டங்களின் நடுவே, தனிமையான இடத்தில் மிக நேர்த்தியாக அவ் வில்லம் அமைந்தது. இவ்விருப்பிடத்தினழகை ஒரு முறை கண்டோர், அதனை ஒருகாலும் மறக்க முடி யாது; அம்மையாரது மாசற்ற மனம்போல் அவர் இருப்பிடமும் அமைந்தது! அம்மையார், தாமிருந்த மாண்டரின் என்னுமிடத்தில், உரிமை பெற்ற அடிமை

களும், ஏனைய மக்களும், கல்விப் பயிற்சி அடையவேண்டுமென்று ஒரு பள்ளிக்கூடம் ஏற்படுத்தினர். அறியாமையிற் கட்டுண்டுகிடந்த அவ்வடிமைகள்,கல்வி மட்டுங் கற்பது போதாது என்று அதன் பயனாகிய ஆண்டவனையும் அவர்கள் வணங்கும்பொருட்டுக் கோயிலுங் கட்டினர். அம்மையாரது சிறந்த நோக்கத்தை என்னென்பேம்! சிறிய ஊராயிருந்த அம்மாண்டரின், அம்மையார் அங்குச் சென்ற பிறகு பெரிய நகராகிவிட்டது! இங்கிருந்து அம்மையார், இன்னும் இரண்டு மூன்று புத்தகங்கள் எழுதினர். உலகத்தில், பலர் தமக்குத் துன்பங்கள் நேர்ந்தபோது, அவைகட்காக அளவுக்கு மிஞ்சி வருந்தித் தம் வாழ்நாளை வீண் நாளாகக் கழிப்பர். நம் ஸ்டோ அம்மையார் ஆண்டவனிடத்து ஆழ்ந்த அன்பும் பற்றும் உடையவராகலான், தமக்கு வருந் துன்பங்களெல்லாம் அவன் பொறுப்பென்றெண்ணி, ஆறுதலடைவர். இவர்தம் புதல்வன் ஒருவன் சிறுவனாக இறந்தான். மற்றொருவர் உடல்நல மின்மையால் கப்பற் பயணத்திற் சென்றவர் திரும்பி வரவில்லை. இத்துயரங்களை அம்மையார் ஒருவாறு தணிவுபடுத்திக்கொண்டு, அடிமையாய்ப்போன தாய்மார்களுடைய துன்பமும் இப்படித்தானே யிருக்குமென்றுணர்ந்தார். உணர்ந்து அவர்கள் நன்மையின் பொருட்டுப் புத்தகங்களை எழுதியபடியே யிருந்தார்.

ஸ்டோ அம்மையார், தம் 70-ஆம் ஆண்டில், அவ்விடம் விட்டுத் தம் ஊருக்குப் புறப்பட்டார். புறப்படும்போது, அவருக்கு விடை கொடுப்பதற்காக, அந்நகரத்திலும் அதன் பக்கங்களிலும் உள்ளவர்கள் ஏராளமாக வந்து கூடித் தம் நன்றியறிதலைக் கூறி வாழ்த்தினர். புகைவண்டி யேறும்போதும் பெருந்திரளான

மக்கள் வந்து அம்மையாரை வாயார வாழ்த்தி வழி யனுப்பினர். அப்போது, அம்மையார் அவர்களை நோக்கி, "அருமை நண்பர்காள்! உங்களெல்லார்க்கும் மிகவும் நன்றிபாராட்டுகின்றேன். இதைத் தவிர வேறென்ன உங்கட்குச் சொல்லப் போகின்றேன். எனினும், ஒன்று சொல்லுகின்றேன். உங்களுக்கு மனத் தடுமாற்றமுங் கவலையும் உண்டானால், அப்படிப்பட்ட நேரங்களில் கடவுளை நினைத்துக்கொள்ளுங்கள். அடிமைகள் பட்ட பொறுக்கொணுத் துன்பங்களை ஆண்டவன் எப்படி விலக்கினார்? நினைத்துப் பாருங்கள். முன் அடிமைகளா யிருந்தவர்களெல்லாரும் இப்போது உரிமை வாழ்வு பெற்றுத் தம் விருப்பம்போல் மனைவி மக்களோடு நலத் துடன் வாழ்கின்றனர். இந்நிலையைக் கண்ணாரக் கண்டாமன்றே! ஆகலான், நமக்கு வருந்துன்பங்களால் மனஞ் சோர்தலாகாது; ஆண்டவன் செயலால் எது நடைபெற வேண்டுமோ அது நடந்துதான் தீரும்; கடவுள் நம்மை ஒருகாலுங் கைவிடமாட்டார்," என்று கூறி முடித்தார்.

## 18. அம்மையாரின் முடிவு

ஸ்டோ அம்மையார், உலக நன்மைகளுக்குட் பாடுபட்டு, ஆண்டிலும் முதியோராகி உடல் தளர்ச்சியும் மிக்கவரானார். 1886-ஆம் ஆண்டில் இவர் தம் அருமைக் கணவனார் ஸ்டோ ஆசிரியர் இறந்துபோனார். 1887 ஆம் ஆண்டில் அம்மையார் தம் உடன்பிறந்தார் ஒரு வர்க்குக் கடிதம் எழுதுகிறார். அஃது,

"அருமைத் தமையனாரவர்கட்கு,

தங்களருமையான கடிதம் வரப்பெற்றுப் பெரிதும் மகிழ்ந்தேன். முன்னே, தாங்கள் அறிவுறுத்திய அ

வுரைகளால் நாங்கள் இவ்வளவு முன்னுக்கு வரலானோம். என்னுடன் இருந்தவர்களெல்லாரும் இப்போது கடவுளிடம் போய்ச் சேர்ந்தார்கள். யானொருத்தியே எஞ்சியவளாக இருக்கின்றேன். எனக்கு இரண்டாண்டு இளையனான ஹென்ரியும் இறந்து போனான்! அப்படியிருக்க, என்னைமட்டும் இறைவன் ஏன் இன்னும் உயிரோடு வைத்திருக்கின்றாரோ தெரியவில்லை. இன்னும், யான் இவ்வுலகில் ஏதாவது செய்ய வேண்டியது இருப்பதாக நினைக்கின்றேன்; இனி, எப்போதும் மனத்தூய்மையோ டிருப்போமாயின், ஒருகாலுந் துன்பம் நேரிடாது. நம்மை எல்லாம்வல்ல கடவுள் காப்பாற்றுவாராக' என்பதாகும்.

பின்னுஞ் சில ஆண்டுகளிருந்து, இப்புனிதவதியார் 1896-ஆம் ஆண்டு, தம் எண்பத்தைந்தாம் ஆண்டில் இறைவன் திருவடிநீழல் எய்தினார்!

ஸ்டௌ பெருமாட்டியார், அடிமை மக்களின் பொருட்டு எழுதிய அருமையான பெரிய புத்தகங்கள் உலகமெங்கணும் பரவின. அவைகளைப் படிப்பவரெல்லாராலும் அடிமை வாழ்வின் நீக்கத்தின்பொருட்டு எல்லா ஊர்களிலும் பெரு முயற்சிகள் எடுக்கப்பட்டன. எங்கும் அவர்க ளடிமை வாழ்வு ஒழிந்து உரிமை வாழ்வு பெற்று மகிழ்ந்தனர்!

ஸ்டௌ அம்மையார், தமக்கு அடுத்தடுத்துப் பிறந்த இளங்குழந்தைகளோடும்,மெல்லிய உடலோடும், அரும்பொருள் நிறைந்த புத்தகங்கள் எழுதினமையை நினைக்கும்போது, பெரியதொரு வியப்பினையே தருகின்றது! வீட்டு வேலைக்குக்கூடப் போதுமான ஆட்களில்லாமல் இவர்தாமே அவைகளைச் செய்துகொண்டு, தம் கணவனுரையுங் குழந்தைகளையும் உன்னிப்பாராயி

ஞர். இங்கிலையில், இவர் புத்தகங்கள் எழுதும் நேரம் இரவுதான். பிள்ளைகள் உறங்கிய பின்னர், இரவு பத்து மணிக்கு மேல்தான் ஏதேனும் படிக்கவும் எழுதவும் முடியுமென்றும், தனியே யிருந்து எழுதுவதற்கும், ஓர் அறைகூட இல்லையே என்றும், தம் கணவருக்கு எழுதினுர்.

உடைய ரெனப்படுவ தூக்கமஃ தில்லார்
உடைய துடையரோ மற்று,

என்ற குறள் மொழிக் கிணங்க, அம்மையார் தம் தளரா ஊக்கமுடைமையே, பின் அவர் உடைப்பெருஞ் செல்வராதற்கு வழியாயமைந்தது!

உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல் மற்றது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து.

என்ற வள்ளுவர் திருமொழிக் கேற்ப, ஊக்கமும், உயர்ந்த எண்ணங்களுமே அம்மையார் கைக்கொண்டவையாகும்.

பெண்மைக்குரிய வீட்டு வேலைகளிற் பழகுகின்ற தாய்மார்களே உலகிற்குப் பெரு நன்மைகளை இதுகாறும் செய்துவந்திருக்கிருர்கள். குழந்தைகளைப் பெருதவர்களும், பிள்ளைகளோடு பிறவாதவர்களும் வீட்டுவேலை தெரியாதவர்களுமான பெண்மக்கள், உலகின் இயற்கைகளும், மக்களின் மனப்பான்மையும், தொழில் செய்வதன் வருத்தமும் அறியாராகலான், அவர்கள் எவ்வளவு புத்தகங்கள் பயின்ருலும், சிறிதும் பயன்பெருர்! அவர்கள் உலகத்திற்கு ஏதும் நன்மை செய்யமாட்டுவாரல்லர். உலக முன்னேற்றத்திற்குப் பாடுபட்ட விக்டோரியா அரசியார், எலிசபெத் பிரை, எலிசபெத் பாரெட் பிரௌனிங் முதலான மாதர்களெல்லாருந் தம் இளமையில் கல்வி கற்றதோடமையாது

அவர்கள் வீட்டு வேலைகள் செய்தும், தம் உடன்பிறந்தாரோடும், ஏனையோரோடும் எல்லாத்துறைகளிலும் பழகியும் வந்தனர். ஆகலான், துன்பப்படும் மக்களுக்குப் பல வழிகளிற் பெருநன்மைகள் செய்தார்கள்.

இஃதிவ்வாறாகப், பெண்மக்கள் அடுப்பு ஊதி அமுது சமைக்குந் தொழிலை அறவே விட்டு, ஆண்மக்களைப்போல் இவர்களும் வெளியேசென்று உயர்ந்த வேலைகளில் அமரத்தகுதியுடையவர்களாதல் வேண்டுமென்று சிலர் ஆங்காங்குப் பேசுகின்றனர். பெண்மக்கள் ஆண்மக்களைப்போல் வெளியே போய் அலைந்து திரிந்து வேலைபார்த்தற்கு அவர் உடல் அமைப்பு ஏற்றதாக ஆண்டவன் அமைக்கவில்லை! ஆண்களும் பெண்களும் ஒருங்கே வெளியே போய் வீட்டிற்கு அலுத்து வந்தால், வீட்டில் வேலைபார்த்து உணவு சமைப்பார் யார்? களைத்த உடலோடும் உணர்ச்சியோடும் வந்து சேரும் பெண்மக்கள் சுவையான உணவு சமைத்தல் கூடுமா? இக்காரணம்பற்றியே பெண்கள் தொழிற்சாலைகளில் வேலைக்குப் போகக்கூடாதென்று எலிசபெத் பாரெட் பிரௌனிங் அம்மையார் மறுத்துப் பேசினார். நம் பெண்மக்களிற் பலர் ஆசிரியர் வேலைகளிலிருக்கின்றனர். அவர்கள் தம் குழந்தைகளைப் பார்ப்பதற்கு வேலையாட்களை வைத்துவிட்டுப் பள்ளிக்கூடங்கட்குச் செல்கின்றனர். வேலைக்காரர்கள், நாம் நம் வீட்டிலிருக்கும்போதே பிள்ளைகளை நன்றாய்ப் பார்க்க மாட்டார்களே! நாம் வெளியே சென்றபிறகு அவர்களை அன்போடு உன்னிப்பார்களா? மாட்டாரன்றோ!

ஓர் உயர்தரக் கல்லூரியில் வேலைபார்த்த ஆங்கில மாதரார் ஒருவருக்குப் பல குழந்தைகள் உண்டு.. அவர் அவர் வீட்டிலிருந்து பிள்ளைகளைப் பேண முடியாமல்

அவர்களின் பொறுப்பை வேலைக்காரர்களிடம் விட்டு வருவர். இப்படியிருக்க, ஒருகால், இவர் பிள்ளைகளில் ஓராண் மகவு, கடுமையான காய்ச்சலால் வருந்தும் போது, இவர் பள்ளிக்கூடத்திற்கு வர நேர்ந்தது! அக்குழவியை வேலையாள் நன்றாகப் பாராமையால் அஃது இறந்ததாகச் சொல்லி வருந்தினார்! ஒரு குழந்தையின் நலத்தை அதன் தாய்போல் ஏனையோர் பார்க்க முடியுமா?

மணமான பெண்மக்கள் தம் அருமைக் கணவன்மார்களின் வருவாய்க்கேற்ப, வீண்செலவு செய்யாமல் தம் வீட்டுவேலைகளைத் தாமே ஒழுங்குபடப் பார்த்தும் ஓய்ந்த நேரங்களில் கல்விகற்றும், தம் மக்களைப் பாதுகாத்தும் வந்தாற்போதுமே! எத்தனை பெண்மக்கள் தம் வீட்டுவேலைகளைப் பாராமல், ஆள்வைத்து விட்டுக் குழந்தைகளையும் உன்னியாமல் படக்காட்சி பார்ப்பதற்கும், உலாவப் போவதற்கும் புறப்படுகின்றனர்! வெளியே நாளெல்லாம் உழைத்து ஓய்வுபெறும் பொருட்டுச் சாயங்கால வேளையில் ஆண்மக்கள் வீடு வரும்போது, பெண்கள் சிலர் தம் இல்லக்கதவை அடைத்துப் பூட்டிவிட்டு வேடிக்கை பார்க்கப் போய்விடுகின்றனர். மணமான நம் தாய்மார்கள் இவ்வாறு நடப்பதைத் தவறென்று கூறி, அவர்கட்கு அறிவுறுத்தி, அவர்கள் வீட்டு வேலைகளை ஒழுங்காகப் பார்க்கவும், எஞ்சிய நேரங்களில் அறிவுநூல், சமயநூல்களைக் கற்று மேன்மையடையுமாறும் செய்தலே நம்மவர் கடமையாகும். மணமான அறிவுடைத் தாய்மார்களிற் சிலர் பொருள் முட்டுப்பாட்டின் காரணமாகப் பள்ளிக்கூடங்களில் வேலைபார்ப்பதை ஈண்டுக் குறிப்பிட மனமில்லை. மணமாகாப் பெண்மணிகள், மருத்துவர்களாகவும் ஆசிரியர்களாகவும் வருதல் முறையே. அவர் வாழ்க்கை சிறந்த

முறையில் அமையுமானால், அவற்றால் ஒரு பக்கம் நன்மையே.

நம் ஸ்டோ அம்மையாரைப்போல், கல்வியிற் றேர்ந்தவர்கள், ஆண்மக்களிற் பலர் இருக்க, அம்மையா ரெழுதிய புத்தகம் மட்டும் வெளியான அன்றே மூவா யிரம் படிகள் விற்றனவாம். இதன்காரண மென்ன? அம்மையார் தங் குடும்பத்தில், தம் அருமைமக்களோடு பல தொல்லைகள் அடைந்தார். தம் இளங்குழவிகளை அலறவிட்டுத் தாய்மார்களைமட்டும் விலைக்குவாங்குங் கொடுமையை, அன்புடைய தாய்தான் அறியமுடியும். பிள்ளைகள் பின்தொடர்ந்து வர அவர்களை அப்புறப் படுத்தி அவர்தம் தாய்மார்களை மட்டும் வேலைக்குக் கொண்டுபோகுங் கொடுஞ் செயலின் தன்மையை அறிவுமிக்க ஓர் அன்னை உணராமல், வேறு ஓர் ஆண் மகன் உணரக்கூடுமா? 'பெற்றவட்கே தெரியும் பிள்ளை அருமை' என்று **தாயுமான அடிகள்** கூறியது பொருத்தமன்றோ? தாய்மைக் குணமுடைய நம் ஸ்டோ அம்மையார் அடிமைத் தாய்மார்களின் தாங் கொணாத் துன்பங்களை மிக உருக்கமாகக் கல்லுங் கரையுமாறு எழுதியது அவருக்கு வாய்வதேயாகும். ஒருகால், அம்மையார், 'என் அருமைக் குழந்தையே! உன் பக்கத்திற் படுத்திருக்கும் பொழுது அடிமைத் தாய்மார்களின் துன்பத்தை நினைந்து நினைந்து கண் ணீர் வடித்தேன்' என்று கூறுகின்றார். இத்தகைய குழைந்த உள்ளமுடைய அருமைத்தாயாகிய ஸ்டோ அம்மையார் எழுதிய புத்தகங்கள் எத்துணை கனிவுள்ள தாயிருக்கு மென்பதைச் சொல்லவும் வேண்டுமா? நம் பெண்மக்கள் இப்பெருமாட்டியார் தம் வாழ்க்கை வர லாற்றினை நன்கு கற்றுணர்ந்து தம் பிறவிப் பயனை இறைவனருளால் எய்துவார்களாக!

## ௪. ஆரியட் மார்த்திஞே அம்மையார்

இங்கிலாந்து நாட்டிலுள்ள அழகிய நகரமாகிய நார்விச் என்னுமிடத்தில்.மார்த்திஞே அம்மையார் பிறந்தார். இவர் தந்தையார் மருந்துகள் செய்து கொடுப்பதில் நன்கு தேர்ந்தவர். இவர் அன்னையார் இங்கிலாந்தின் வட பகுதியில் சர்க்கரை துப்புரவு செய்து கொண்டிருந்த ஒருவரின் மகளாராவர். இவ்விருவருக்கும் அம்மையார் ஆருவது மகள். இவருடன் பிறந்தவர்கள் எட்டுப்பேர். மார்த்திஞேவின் அன்னையாருடைய இயற்கை மிகவும் வியக்கத் தக்கதாயிருந்தது! இவர் நல்லொழுக்கமுடையவர். ஆனல், மிகுந்த பெருமையும், ஒரே பிடியான மனமும் உடையவர். தம் வீட்டிற்கு வருவோரைக் குளிர்ந்த முகத்துடன் வரவேற்கத் தெரியாதவர். தம் மனதிலுள்ளதை வெளியிட்டுச் சொல்லார். தம்மக்களிடத்தும் அன்பை வெளிப்படையாகக் காட்டி அவர்களோடு சிரித்து விளையாடி அன்பாயிருக்கமாட்டார். வீட்டு வேலைகளை மிக ஒழுங்காகச் செய்வர். பிள்ளைகட்கு வெண்டுவனவற்றைக் குறைவிலாது செய்து கொடுப்பர்.

### 1. அம்மையாரது குழவிக்காலம்.

மார்த்திஞே சிறுகுழந்தையாயிருந்த காலத்தில் காது செவிடுபட்டது. இவருக்கு நினைவு தெரியுமுன்னரே பொருள்களை மோந்தால் மணந்தெரிவதில்லை. உணவுப் பண்டங்களைச் சுவைத்து அறிந்து கொள்ளும் உணர்ச்சியு மில்லாதிருந்தது. இதுவுமல்லாமல், குழவிக் காலத்திலேயே இவருக்குப் பாலுணவு பிடியாமல் துன்பப்பட்டார். இத்துன்பத்தை அறிந்து அக்குழவிக்கு வேறுவகையில் கஞ்சி உணவு கொடுக்கவும் அவர்

அன்னையார் அறியார். இவர் தாம் நினைத்தபடியே எதனையும் செய்யுமியற்கை யுடையவராகலான், பிறரைக் கேட்டுத் தக்கமுறையினைத் தங்குழவிக்குச் செய்ய முடியாதிருந்தார். பிள்ளைகளை வளர்க்க மிகவும் பாடுபட்டாராயினும், அவர் அவர்களிடம் இனிய முகத்தோடு அன்பாகப் பேசி மகிழ்வதேயில்லை! மார்த்தினோ அம்மையார் தாமெழுதிய நூலொன்றில், தம் அன்னையாருடைய குணங்களை அயல்நாட்டு மாதரொருவர் கூறுவது போல் மிக நன்றாக விளக்கிக் காட்டியிருக்கிறார். மார்த்தினோவின் உடன்பிறந்தார், தமக்கு ஏற்படும் வருத்தங்களைத் தம் அன்னையாரிடம் மிகுதியாய்ச் சொல்வதில்லை. அன்னையார் இவர்களின் துன்பங்களைக் கண்டு வாய்விட்டு ஏதுஞ் சொல்லாமல், அவ்வருத்தந் தீரும் பொருட்டு இடைவிடாமல் உழைப்பார்! இவ்வுழைப்போடு, தம் மனதிற்கொண்ட அன்பை மக்களிடம் நன்குகாட்டி அளவளாவி யிருந்திருப்பராயின், அவர்கட்கு மிகுந்த மகிழ்ச்சியினைத் தந்திருக்கும்!

## 2. அம்மையாரின் இளமைக்காலம்.

அம்மையார், தம் குழவிக்காலத்திலேயே, பெரும்பாலும் நலக்குறைவாகவே யிருந்தமையின், அவர் சிறுமியாக வளர்ந்த துவக்கத்தில், மிகமெதுவாகவும் சுறுசுறுப் பில்லாமலுமிருந்தார். அவர் வளர வளர ஆண்டவனருளால் நோய் நீங்கி உடல் வலுவேறப் பெற்றார், இதன்பின் அவரது அறிவும் ஓங்கி வளருவதாயிற்று! அவர் கல்வி கற்பதில் பெருவிருப்பங்கொண்டார். அவர் தம் ஏழாவதாண்டில் மில்டன் ஆசிரியர் இயற்றிய செய்யுட்களைப் பயின்று அவற்றின் அரிய பொருளை அறிந்தார். இன்னும், அவர் நாளடைவில் ஷேக்ஸ்பியர்

கோல்ட்ஸ்மித், தாம்சன் முதலிய பேராசிரியர்கள் இயற்றிய அறிவுப்பெரு நூல்களையெல்லாம் படித்து அறிந்து கொண்டமை அவரது அறிவின் பேராற்றலை விளக்குகின்றது! இவர் தம் தமையன்மார்களும், தமக்கையரும்,இவருக்கு இலத்தீன்,பிரஞ்சு மொழிகளை நன்றாய்க் கற்றுக்கொடுத்தனர். பின்னர், மார்த்தினோ தம் பதின்மூராவதாண்டில் பள்ளிக்கூடத்திற்குச்சென்று இரண்டாண்டுகள் ஆங்கில மொழியைப் பிழையறக் கற்றுக் கொண்டார். பிறகு வீட்டிலிருந்தே பல நூல்களைக் கற்றார். அம்மையார் இஃதோடமையாமல், தையல் வேலைகளிலும் பழகுவாராயினார்.

முன் காலத்தில், இங்கிலாந்தில், தையல் வேலை பெண்களுக்கு மிக முதன்மையானதாயிருந்தது. இது பற்றி அம்மையார், " இக்காலத்தில், தையல் வேலை மிகச் சிறந்ததென்று எங்கும் செய்யப்பட்டு வருகிறது. எனக்குத் தையல் வேலையினால் உண்டாகும் மகிழ்ச்சி சிறிதன்று ; என்னைப்போல் தைப்பதிற் பாடுபடுகிறவர்கள் மிகுதியாயிரார். என்னுடைய பழக்கத்தில், தையல் வேலையைப் போல வருத்தமானது வேறொன்றுமில்லை. இதனை ஓர் அளவாகச் செய்தால்மட்டுமே நல்லதாகும். எந்நேரமும் உட்கார்ந்து குனிந்து தைத்துக் கொண்டிருப்பதில் அவ்வளவு வருத்தமிராது ; இடைவிடாது தைத்துக் கொண்டிருந்தால் கை ஓய்ந்து போகும் ; கையில் வலி உண்டாகும் ; எந்நேரமுந் தைப்பதால் எப்படிப் பட்டவர்களுக்கும் களைப்பு உண்டாகும். யான் இளம் பெண்ணாயிருக்கும்போது, தைத்துக் கொண்டிருக்கையில் மற்றவர்களை இழித்துப் பேசி, வீண்வம்பு வளர்த்தேன். இதனால் என் உடல் வன்மை குன்றியது. பிற்காலத்தில் அவ்வாறு பேசியதற்கு எவ்வளவோ வருந்தியும் பயனில்லை" என்று கூறுகின்றார்.

வேறெதிலுங் கருத்தில்லாமல், பல்வகைப்பட நுணுகித் தைக்கும் தையல் வேலை ஒன்றிலேயே பெண் மக்கள் எந்நேரமும் ஈடுபடுதல், சிறந்த உறுப்பாகிய கண்ணிற்குப் பெருங்கெடுதியாகும்; மேலும் 'தைத் துக் கொண்டிருந்தபோது பிறரைப் பழித்துப் பேசுவது ஏற்பட்டது' என்று அம்மையார் கூறுகிறார். ஏனெனில், தையல் வேலையினால் உயர்ந்த அறிவுப் பொருள்களை அறிந்துகொள்ள முடியாது; ஆண்ட வனைப்பற்றியும் அவனருமையாகப் படைத்த இயற் கைக் காட்சிகளின் அழகைப்பற்றியும், பல்வேறு நாடு களில்ஆங்காங்கே தோன்றி விளங்கும் அறிஞர்களைப்பற் றியும், தையல் வேலையினால் அறிந்து கடைத்தேற இய லுமா? இயலாதே! ஆனதுபற்றியே, அதனை ஓரளவிற் செய்தல் வேண்டுமென்றார்.

இங்கு, இவ்விந்திய நாட்டிலும், வீடுகள்தோறும், நம் பெண்மக்கள், கல்வி கற்பதில் சிறிதும் விருப்ப மிலராய், எந்நேரமும், பலநிறங்களுள்ள நூல்களா லும், மணிகளாலுந் தம் உடைகளுக்கு ஓரந் தைப் பதும், பூக்கள் பின்னுவதுமே பெரு நாகரிகமென்று எண்ணுகின்றார்கள். இதுமட்டுமா? நம் பெண்மக்களிற் பலர், பல்வகை நிறங்களுள்ள சிறு மணிகளை வாங்கி, அவைகளைக் கண்ணாடி போலுள்ள மிக மெல்லிதான சேலைகளின் விளிம்புகளில் வைத்துத் தைத்து உடுத்து கின்றனர்; இவர்கள் தம் தாய்மார்களைத் தொல்லைப் படுத்திப் பணம் வாங்கி, இம்மணிகளை ஒன்று சேர்த் துப் பின்னிச் சேலை ஓரங்களில் தைப்பதற்கு எவ்வளவு காலக்கழிவாகும்! இச்சேலைகளை உடுத்துவோர் வீட்டு வேலைகள் செய்வதில்லை. ஏனெனில், இச்சேலைகளில் அழுக்குப்படின், ஓரங்களில் மணிகளிருப்பதால், அதனை

உடனே துவைக்க முடியாது; இதனை வெளுக்கப் போடுவதானாலுந் தொல்லைதான். இவ்வளவு மணிக் கோர்வைகளையும் பிரித்தெடுத்த பின்னர்தான் அதனை வெளுக்கலாம். இவ்வாறு ஓயாமல் தைக்கும் பழக்கத் தால், நம் இந்தியப் பெண்கள் தம் உயரிய மனநிலை கெட்டு, எந்நேரமுந் தம் உடலை வீண் அழகு படுத்து வதிலேயே தம வாழ்நாளைக் கழிப்பது நாகரிகமென்று அறிவுடையோர் கருதுவரோ? இங்ஙனம் நம் பெண்கள் காலத்தை வீண்போக்காமல் அறிவிற்சிறந்த அரும் பெரும் உயர்ந்த நூல்களைக் கற்பதில் அவர்கள் ஊக்கங் கொள்ளல் வேண்டுமென்று அவர்களின் தாய்மார்கள் அவர்கட்கு இடையறுது அறிவுறுத்தல் வேண்டும். இது கொண்டு, யான் தையற் றொழிலை பெண்மக்களுக்கு வேண்டாமென்று சொல்ல முன் வரவில்லை. ஆங்கில மாதராகிய மார்த்தினோ பெருமாட்டியார் மொழிந் ததுபோல், அஃதை ஓர் அளவிற் பயன்படுத்தல் வேண்டு மென்பதே என் கருத்தாகும். கிழிந்த உடைகளைத் தைக்க வேண்டுவது முதன்மையே! இன்னும், இவர்கள் வீட்டிலுள்ள குழந்தைகட்கும் தமக்கும், பாவாடை, சட்டை முதலியன எளிதானமுறையில் தைத்தல் வேண் டும். கைவேலைகளைப் பிறி தொருகால் கற்றுக் கொள்ள லாம். கல்வி அத்தகையதன்று; அஃது ஐந்தாண்டிலி ருந்தே மிகக் கருத்தாய்ப் பயில வேண்டுவதொன்றாகும். "பெண்மக்களே! கல்விகற்க முன் எழுங்கள்; முன் காலத்தில் இருந்ததுபோல், இக்காலத்தில் ஆண் மக்க ளுக்கு மட்டுமே உரியதென்று அது மூடிவைக்கப்பட வில்லை; ஆகலான், நீங்களும் நன்றாகக் கற்று அறியாமை நீங்கிப் பழிபாவங்களுக்கு அஞ்சி, வீண்காலம் போக் காமல் பேரின்ப வாழ்வை அடைய முன் வாருங்கள்' என்று **டெனிசன்** என்னும் ஆங்கில ஆசிரியர் கூறுகிறார்

அக்காலம், ஆங்கில நாட்டில் பெண்மக்களின் கல்வி மிகக் குறைவு. ' நான் சிறுமியாயிருந்த காலத்தில், சிறு பெண்கள் கல்வி மிகுதியாகக் கற்றல் நன்றன்று என்றும், அதைவிட எழுதுகோல்கூட அவர்களது கையில் இருக்கக்கூடாதென்றும் மக்கள் எண்ணினார்கள்,' என்று மார்த்திேனா அம்மையார் கூறினார். ஆகையால் அம்மையார், மாலை நேரங்களிலும், இரவிலும் பிறரறியாமல் படித்து வந்தார் இன்னும் இவர், தம் உடன் பிறந்தாேனாடு இலத்தீன் மொழியும், அத்தை மகேனாடு இத்தாலிய மொழியும் பயின்றார். இவர் தம் கடவுள் நூலாகிய விவிலிய மறையும், இன்னும்பல அறநூல்களும் இறைவனைப் பற்றிக் கூறும் அரிய பெரிய நூல்களும் மிகக் கருத்தாகப் படித்து, அவைகளில் வல்லுநராயினார். பல அறிவு நூல்களைத் துருவித் துருவிப் பயின்று வந்தாராகலான், நாளடைவில், கட்டுரைகளும், நூல்களும் எழுதும பேராற்றல் அம்மையார் வாய்க்கப் பெற்றார். ஆனால் ஊழ்வினைப் பயனாக அம்மையாருக்கு வரவரக் காது கேட்கும் உணர்ச்சி மிகவும் மட்டுப்பட்டது.

## 3. அம்மையாரின் மணம்

அம்மையார் இருபதாண்டினராயிருந்தபோது இவர் அன்னையார் இவருக்குத் திருமணஞ் செய்தல் வேண்டுமென்று எண்ணினார். நல்லியல்புகள் மிக்க வர்த்திங்டன் என்பார், அம்மையாருக்கு மணமகனாக உறுதி செயயப்பட்டார். இவர் அம்மையாரின் உடன்பிறந்தாரான ஜேம்ஸ் என்பாரின் சிறந்த நண்பரும், பள்ளிக்கூடத்தில் அவருடன் ஒன்றாய்ப் பயின்றவருமாவர். மார்த்திேனா, வர்த்திங்டனைக் காணுமுன்னரே அவருக்குக் கடிதங்கள் எழுதிக்கொண்டிருந்தாராகையால், அவ்விருவருக்கும்

சிறந்த நேயமுண்டாயிற்று. பள்ளிக்கூட விடுமுறை களில் வர்த்திங்டன் நார்விச் நகரத்திற்கு வந்து தம் நண்பர் ஜேம்ஸ் வீட்டில் தங்கியிருப்பர். அக்காலங்களில், அவருக்கும் அம்மையாருக்கும் மிகுந்தபழக்கமுண்டாகி ஒருவருக்கொருவர் மிக்க அன்புடையவர்களானார்கள்! வர்த்திங்டன் மிகுந்த பணமில்லாதவர். இவர் மாணவராயிருந்தமையின், இவர்களிருவரும் மணம் புரிந்து கொள்ள வாய்க்கவில்லை. இதுபற்றி வர்த்திங்டன் மனங்கரைந்து உருகினார்! அம்மையாரின் பெற்றோர் இவ்விருவர்தம் திருமணத்தை உறுதியாக ஒப்புக் கொள்ள மூன்றாண்டுகளாயின. இவ்வாறு நெடுங்காலங் கடந்ததாயினும் இக்காதலரிருவரது மிகுந்த அன்பு நாளுக்குநாள் திட்பமுறுவ தாயிற்று!

## 4. அம்மையாருக்குக் குடும்பத்தில் துன்பம்

அம்மையாருக்கு இருபத்து நாலாவதாண்டில் இரண்டு துன்பங்கள் நேரிட்டன! நன்றாக வாணிபஞ் செய்து பெரும் ஊதியம் பெற்று வந்த அம்மையாரின் தந்தையார்க்குப் பொருட்கேடு உண்டாயிற்று! இதனோடு அவருக்கு நோயுமுண்டானது! பொருளிழந்த கவலையே பெரிதாகச் சில திங்களில் அவர் இவ்வுலக வாழ்வு நீத்தனர்! இவர் இறந்துபோகுங் காலத்தில் தம் அருமை மகளார் மார்த்திநோ செய்த விரிவுரைகள், கடவுள் வணக்கம் ஆகிய இவைகளடங்கிய புத்தகத்தைப் படித்து மிகுந்த ஆறுதலடைந்தார். மற்றொரு பெருந்துன்பம் என்னவென்றால், அம்மையாரின் இன்னுயிர்க் காதலரான வர்த்திங்டன் என்பார் எப்போதும் மிக்க உடல் வன்மையில்லாதவர். இவருக்குத் திடீரென மூளையைப் பற்றிக் காய்ச்சல் நோய் உண்டானது! இந்

நோய்க்கு மருந்து வேண்டாமென்றும்,தங் காதலியாகிய மார்த்திேனா தம்மிடம் வந்திருந்தால் நோய் நீங்கிவிடு மென்றுஞ் சொன்னார். பின், மார்த்திேனாவின் அன்னை யாருக்குக் கடிதமொன்று எழுதி, அதில் அவர் தம் மனை யாள் தம்மை வந்து பார்த்துவிட்டுப் போமாறு, அவரை அனுப்பும்படி வேண்டிக்கொண்டார்! வர்த்திங்டன் போலவே, அம்மையாரும் தம் தலைவரைப் பார்க்க வேண்டுமென்று பேராவல் கொண்டார்! ஆனால், ஐயகோ! அம்மையாரின் அன்னை அவரை அனுப்ப ஒருப்படவில்லை! அம்மையார் தாயிட்ட கட்டளையை மீறி நடக்க முடியவில்லை! இவர்தம் உயிருக்குயிராயுள்ள காதலரைப் பார்ப்பதற்கில்லையே என்று ஏங்கி வருந்திக் கொண்டிருக்கையில், வர்த்திங்டன் இறந்து போனார்! அம்மையாரால் இக்கொடுந்துன்பம் பொறுக்குந் தரத் ததோ? இக்காலமுதல், அம்மையார் தம் வாழ்நாள் முழுதும் கைம்பெண்ணாகவே இருந்தார். அவர் தம் வாழ்நாள் முழுதுங் கல்வித் துறையிலே கழித்துவந் தார். இங்கு ஒன்று உன்னிக்கற் பாலது.

நந் தென்றமிழ் நாட்டிலிருந்த திலகவதியாரின் வாழ்க்கைபோல் மார்த்திேனா அம்மையார்க்கும் அமை வதாயிற்று. திலகவதியார் மணஞ் செய்து கொள்ள வேண்டுமென்றிருந்த தங் காதலர் **கலிப்பகையார்** என் பார் போர்க்களத்தில் இறந்துபட்டார்! இஃதறிந்த அம்மை, ஆற்றொணாத் துயருழந்தார். அன்று முதல் இவர் தம் சிறந்த ஆடை அணிகலன்களைக் கழற்றி விட்டுத் துறவு நிலையை மேற்கொண்டு, திருவதிகை வீரட்டானம் என்னும் ஊரின்கண்ணுள்ள கோயிலில் இருந்து ஆண்டவனுக்கு உளங்குழைந்த அன்போடு *திருத்தொண்டுகள் புரிந்தும், அங்குவரும் பெண்மக்க

ளுக்கு அன்பும் அருளுந் ததும்பிய அறவுரைகளைக் கற்பித்தும் வந்தார். இன்னும், மிகப் பழைய காலத்தே கற்பரசிகளில் ஒருத்தியாகிய மணிமேகலை என்பாளின் துறவு மிகச் சிறந்ததாதலை அறியாதாரும் உளரோ? மின்னற் கொடிபோல் அழகுமிக்காராகிய இவ்வருமணியார் தம் கட்டிளமைக்காலத்தே தாம் விரும்பிய காதலனையும் அடையப் பெறாமல், துறவுநிலை மேற்கொண்டு பல அருள்நிகழ்ச்சிகள் செய்தும்,தம் பெருநகராகிய காவிரிப் பூம்பட்டினத்திலிருந்து காஞ்சிபுரம் வரையில் தம்மை எதிர்பட்ட ஆண் பெண் என்னும் இருதிறத்தாருக்கும் அறவுரைகள் கூறியும்போந்த நன்மையினை நாம் நன்ருகப் படித்துணர்தல் வேண்டும்.

இப்போது, தமிழ் நாட்டில் இள ஆண்டுகளிற் கைம்பெண்ணானவர்களின் தொகை மிகுதியாகவேயிருக்கின்றது! இவர்கள் தங்காலத்தைக் கழிக்க வழிதெரியாமல் துன்புறுகின்றனர். குழந்தைகளில்லாமல் இருபது ஆண்டுகட் குட்பட்டோர் கைம்பெண்களாகப் பலர் இருக்கின்றனர்! இவர்களின் தாய் தந்தையர்களும் இவர்கள் வாழ்நாளைப்பற்றிச் சிறிதுங் கவலை கொள்ளவில்லை. மார்த்தினோ அம்மையார் சொன்னபடி தையல் வேலை பெண்மக்களின் அறிவையும் நினைவையும் பண்படுத்தாது என்பதை உணர்ந்து தமிழ், ஆங்கில மொழிகளில் பெரியோர்களியற்றிய அறிவுப் பெருநூல்களை அவர்கள் கற்குமாறு செய்தல்வேண்டும். இல்லையேல், இருபதாண்டுக்கு உட்பட்டவர்களாயின், அவர்களைச் சிறந்த பள்ளிக்கூடங்களில் ஆரவாரமில்லாமல் அமைதியோடு கல்வி கற்குமாறு விடல்வேண்டும். அக்காலத்தில், இத்தகைய இளங் கைம்பெண்கள் வீட்டிலிருந்தால் மக்கட் கூட்டுறவால் நினைவு கெடப் பெறு

வார்களென்று, அவர்களை அவர் தம் பெற்றோர் கோயில் களில் மிகப் பாதுகாவலாகக் கட்டப்பட்ட, கன்னி மடங் களில் வைத்து அவர்கள் நூல்கள் பயிலவும், ஆண்டவற் குத் திருத்தொண்டுகள் செய்யவும் ஏற்பாடு செய்தனர். இடைப்பட்ட காலத்தில் கல்வி வளர்ச்சி வரவரக் குறைந்துபோகவே, இவ்வுயரிய பழக்கங்கள் இலவாய்ப் போயின. பெண்களின் முன்னேற்றமுங் குறைந்தது! இப்போது, ஆங்காங்கே பெண்கள் மிகுதியாகப் படிப் பிக்கப்படுகின்றனர். அதில், அறிவு நூற் கல்வி ஒரு சில ருக்கே கொடுக்கப்படுகின்றது. தமிழ்நூற் கல்வியில் மிக்க சிறந்த ஆசிரியைகளைக் காண்பது நம் நாட்டில் மிக அருமையாகத்தா னிருக்கின்றது! இளங் கைம்பெண் களைப் பள்ளிக்கூடங்கட்கு அனுப்ப அறவே வெறுக்கும், அவர்தம் பெற்றோர் அவர்களைத் தம் வீட்டின்கண்ணே வைத்து உயர்ந்த கல்வி கற்பித்தல் இன்றியமையாத தென்பதை அவர்கள் நன்றாகப் பன்முறையும் உணர்தல் வேண்டும். பொருள் முட்டுப்பாடுடையோர் தம் கைம்பெண்களை ஆசிரியர் வேலைக்குப் பயிலவிடுதலும் நன்றே. அவர்களது அறிவை மழுக்கி அவர்களை வீட் டில் வைப்பது பெருங் குற்றமாகும். பூப்புப்பெறாத சிறு மிகள் கைம்பெண்களானால், அவர்களை மறுமணஞ் செய்து கொடுக்கலாமென்பது தான் எம்கருத்து. அதன் பின், மணந்த பெண்கள் கணவனையிழந்தால், அவர் கட்கு மறு மணமில்லாமல், அவர்களைக் கல்வித்துறை யில் திருப்பிவிடுதலே மிக நன்று. மணமாவதற்கு முன்னரே கணவரையிழந்த இளமைக் காலத்தினரான மார்த்திேனா அம்மையார் திரும்ப மணஞ்செய்து கொள் ளாமல், தம் மனதை நூல்களெழுதுவதிலும், உலகிற் குப் பல நன்மைகள் செய்வதிலுமே கருத்தையுங் காலத் தையுஞ் செலுத்தினர்.

### 5. அம்மையார் நூல்கள் எழுதுதல்

அம்மையார், தம் இருபதாம் ஆண்டில் புத்தகங்கள் எழுதத்துவங்கினார். எல்லாம்வல்ல ஆண்டவனிடத்து அன்பு கொள்ளும் வழிகளை விளக்கி எழுதிய சில பெண் மணிகளின் பெருமையைப் பற்றி அவர் முதன் முதல் எழுதத் துவங்கினார். இந்நூல்கள் மிகச் சிறந்தனவாகும். அம்மையாருக்கு முன் கற்றறிந்த மாதர்கள் சிலர், கடவுளிடத்துப் பேரன்புடையராய் அவனருள்வழி ஒழுகும் சிறந்த முறைகளை நூல்களில் எழுதிவைத்ததாகத் தெரிவிக்கின்றார். 'இவைகளை யான் நுணுகிப் படித்தமையே, யான் எழுதும் நூல்கள் நன்றாயிருப்பதற்குக் காரணமாகும்' என்றார். அவர் பெண்மக்களின் மனம் இயல்பாகவே இளகிய தன்மையுடையதாகலின், அவர்கட்கு நல்ல பொருள்களிடத்துப் பற்று உண்டாவது இயற்கை; 'கடவுளிடத்தும், ஒழுங்கான வழிகளிலும் இவ்வாறு பெண்மக்கள் முன்னேறி வருவதறிந்து மகிழ்கின்றேன்' என்று இன்னொரிடத்திற் கூறுகிறார். பெண்கள் புத்தகங்களெழுதி அவற்றின் வழியாக மற்றவர்களுக்கு அறிவு புகட்டலா மென்பதை அம்மையார் வற்புறுத்துகின்றார். பல்வேறு மதக்கோட்பாடுகளைப் பற்றி அம்மையார் ஒருகாலும் வழக்காடுவதில்லை. பெண்மக்கள் எப்படிப்பட்ட முதன்மையான பொருளையும் ஆராய்ந்தறிய வல்லவர்களென்றும், குற்றமற்று வாழக்கூடுமென்றும், மார்த்தினோ பெருமாட்டியார் நன்றாக விளக்கிக் காட்டி எழுதத் துவங்கினார். இவர் முதலில், புத்தகம் எழுதிய காலத்தில், இவருக்கு வருவாய் கிடைக்கவில்லை. அப்படியிருந்தும், அம்மையார் அதனாற் சோர்வடையாமல் எழுதிக்கொண்டே வந்தார். ஆனால், இவர் தமக்குத் தாமெழுதும் நூல்களால் நன்மை

கிடைக்குமென்ற நம்பிக்கை யிருந்தமையால், எழுதுங் காரியத்தை விடாமற் செய்து வந்தார். இவர் பெருமை உடனே வெளிப்படாமல், நாளடைவில் அது வெளிப் படையாயிற்று! அம்மையாரது கல்வியின் பெருமை எங்கும் பரவலாயிற்று. இவர் சிறுமியாயிருந்த காலத் தில் இவருக்கு இத்துணைக் கல்வித்திறன் உண்டாகு மென்று அவர் அன்னையார் நினைக்கவேயில்லை. ஒரு கால், 'என் மக்களைப் பற்றிக் கவலை இல்லை; ஆனால், மார்த்திேனு காது கேளாமலிருப்பதால் அவள் வாழ்க்கை எப்படி ஆகுமோ என்பது நினைக்க வருத்த மாயிருக்கிறது' என்றார் அவர் அன்னையார். இலண்டன் நகரில் ஆண்டொன்றுக்கு இரண்டாயிரம் பவுன் கிடைக் கக்கூடிய வேலை ஒன்று அம்மையாருக்குக் கிடைக்கிற காலத்தில், இவரை மணஞ்செய்ய இருந்த வர்த்திங்டன், என்பாரிடம மார்த்திேனு பேசிக் கொண்டிருந்தபடி யால், அவர் உடனே அந்நகரைவிட்டு நார்விச்சுக்குப் போமாறு அன்னையார் கட்டளையிட்டார். அதன் படியே அம்மையார் தம் வீடுசென்றார்.

## 6. அம்மையார் பரிசு பெற்றமை

அக்காலத்தில், ரோமர், யூதர், மகமதியர் ஆகிய இவர்கள் தம் கொள்கைகளை விட்டுக் கிறித்துவர்களா கும்படி பல கட்டுரைகள் எழுதுபவர்களுக்குத் தனித் தனியே மூன்று பரிசுகள் கொடுக்கப்படுமென்று வெளி யிட்டனர். இஃதறிந்து அம்மையார் மூன்று கட்டுரை கள் எழுதி, அவைகளைத் தனித்தனியே அனுப்பி மூன்று பரிசுகளும் அவரே பெற்றார்! 1831-ஆம் ஆண்டு 'பொரு ளாட்சி முறை' என்றநூலை, எல்லாருக்கும் பயன்படு மாறு கதை வடிவமாக எழுதி வெளியிட்டார். அவர்

இதனை எழுதியகாலம் அதற்கேற்றதா யிருந்தது. அப்போதுதான், மக்களெல்லாருங்கூடி ஓர் அவைகூட்டி அதிற் சில சீர்திருத்தச் சட்டங்களைக் கொணர்ந்தனர். பெருஞ் செல்வர்கள் ஓரவைகூட்டி அச்சீர்திருத்தச் சட்டங்கள் வேண்டாமென்று மறுத்தனர். மக்களுக்கு வேண்டிய சிறந்த பொருள்களை யெல்லாம் அம்மையார் உயர்ந்த நூல்களின் வழியாக நன்குக எடுத்துக்காட்டினார்; கதைகளின் வாயிலாகவே பல அருங்கருத்துக்களை எழுதினார். இவர் இவ்வளவு பாடுபட்டு எழுதியவைகளை அச்சிட எவருங்கிடைக்கவில்லை! ஆனாலும், அவர் மனஊக்கத்தை விடாமல் இரவெல்லாம் எழுதிவந்தார். 'முயற்சி திருவினையாக்கும்' என்ற குறள் மொழிப்படி அம்மையார் எழுதியவைகளை அச்சிட ஒருவர் உடன்பட்டார். அதில் அம்மையாருக்கு மிகுந்த ஊதியங் கிடைக்கவில்லையாயினும், அத்தனை காலமாக மறைந்து கிடந்த கையெழுத்துப் படிகள் அச்சிடப்பட்டு வெளிவரலாயின! அவைகளை அச்சிட்ட பத்து நாளைக்குள் 1500 படிகள் விலையாயின. ஆகலான், அதனை அச்சிட்டவர் மீண்டும் 500 படிகள் உடனே அச்சிட்டு வெளியிட்டனர். எல்லாரும் அம்மையார் எழுதியவைகளைப் படித்து மிகவுங் கொண்டாடினார்கள். இது முதலாக, அம்மையார் பார்வைக்கு வந்த கடிதங்களும், சிறு புத்தகங்களும் செய்தித்தாள்களும் அளவில்லை! அம்மையாரால் பல புத்தகங்கள் வெளிவந்திருப்பதைக் கண்டு, லார்டு ப்ருகாம் என்னும் பெருஞ் செல்வரொருவர் வியப்படைந்து இவ்வாறு பல நூல்க ளெழுதி வெளியிட்டு எங்குங் கல்வியைப் பரவச் செய்வதில் அம்மையார் போல் ஆண் மக்களுள் எவருமிலர்' என்று கூறினார்.

## 7. இலண்டனில் இருத்தல்

மார்த்திநோ பெருமாட்டியார், தம் அன்னையாரோடு இலண்டன்மா நகரில் இருப்பாராயினர். இவரது கல்விப் பெருமை எங்கும் பரவியது. பெரும்புலவர்களும் பட்டம் பெற்றவர்களும், பெருஞ் செல்வர்களும் அவரைப் பார்க்கவந்தனர். இவர் இலண்டனிலிருந்த இரண்டாண்டுக்குள் 34 புத்தகங்கள் எழுதினர். இவ்வாறெழுதி அச்சிட்ட புத்தகங்கள் நூற்றிருபது பக்கங்கட்குக் குறையாமலிருந்தன. உடல் வன்மையில்லாத இப்பெருமாட்டி, பொது மக்கள் கடமை, அரசியல் முறைகள், காரியங்கள், சிறுவர்கள் அறிய வேண்டியவை முதலிய அரும்பொருள்களை யெல்லாம் வியத்தகு முறையில்' எழுதினரென்றால், அஃது ஆண்டவனருள் அவர்பால் விளங்கினமையே காரணமாகும். அவர் எழுதும் புத்தகம், கதைகள் ஒவ்வொன்றிலும் மக்களுடைய மனத்தோற்றங்களை யெல்லாம் நன்றாக விளக்கிக் காட்டுவார். அவற்றிற் சிலருடைய குணங்களை மறைபொருளாக எடுத்துக்காட்டி எழுதுவார்.

அம்மையார், காலை ஏழு மணிக்கு எழுந்திருப்பார். தாமே வீட்டு வேலைகளைப் பார்த்துக் காப்பி என்னுங் குடிநீர் போட்டுக் குடித்த பின்னர் சமையல் வேலையை முடிப்பார். பிறகு இரண்டு மணிவரை நூல்கள் எழுதுவார். சிறிது நேரம் வருவாருடன் பேசிவிட்டுச் செய்தித்தாள்கள் படிப்பார். பின்னர் மாலை உணவு செய்து விட்டு, இரவில் நேயர்களைப் பார்க்கச் செல்வர். இவ்வாறு அம்மையாருக்கு நாள் கழிவதாயிற்று.

## 8. அம்மையார் அமெரிக்கா செல்லுதல்

அம்மையார் வட அமெரிக்காவிற்குச் சென்று, அங்கே இரண்டாண்டுகள் தங்கியிருந்து, அங்குள்ள

இடங்களைச் சுற்றிப் பார்த்தார். 'கற்றோர்க்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு' என்று ஔவைப் பிராட்டியார் அருளியபடி, கல்வி அறிவான் ஆன்ற மார்த்தினோ அம்மையார்க்குச் சென்ற இடங்களிலெல்லாம் சிறப்புகள் நடந்தன! அமெரிக்காவைப் பற்றி அவர் ஒரு புத்தகம் எழுதினார். அதனால், அவருக்கு 9000 பவுன் கிடைத்தது. அங்கிருந்து இன்னும், பல பொருள்கள் பற்றிப் பல அரிய புத்தகங்கள் எழுதினார். பின்னர் தம் ஊர்க்குத் திரும்பினார்.

புத்தகங்கள் மிகுதியாய் ஓயாமல் எழுதுவதால், அம்மையார்க்கு உடல்நலங் கெட்டது. வெளியே போக முடியாமல் வீட்டிலேயே இருந்தார். இவ்வளவு நலங் குன்றியிருந்தாலும், சிறிது நோய் நீங்கினால் எழுதத் துவங்குவர். நோயில்லாமல் மிகுந்த சுறுசுறுப்புடையானொருவன், எத்தனை புத்தகங்கள் எழுதக்கூடுமோ அவ்வளவுக்கு மேலாகவே அம்மையார் எழுதுவாராயினர். வாணிபஞ் செய்வோர் அதில் மேலோங்கத்தக்கவைகளைத் 'தற்கால நிலைமை' என்னும் புத்தகத்தில் மிகத் திறமையாகவும் நுட்பமாகவும் எழுதினாரென்று ஜப்பி என்னும் பெருஞ் செல்வரொருவர் எழுதியிருக்கின்றார். இதைப் பற்றிப் 'பிளாரன்ஸ் நைட்டிங்கேல்' அம்மையாரும் 'இதனினும் சிறந்த நூல் வேறொன்றுமில்லை' என்றார்.

## 9. அம்மையார் பணத்திற் பற்றில்லாதவர்

மார்த்தினோ அம்மையார் அடிக்கடி நோய்வாய்ப்பட்டு வருந்திக் கொண்டிருக்கும்போது, அரசியலார் இவருக்கு ஆண்டொன்றிற்கு ரூ. 2,400 நன்கொடை கொடுப்பதாகத் தெரிவித்தனர். அது தமக்கு வேண்

டாமென்று அம்மையார் சொல்லி விட்டார். ஏனெனில், அரசியலார் ஏழைகளுக்கும் பெருஞ் செல்வர்களுக்கும் வேறுபாடில்லாமல் ஒரே வகையாய் வரிபோட்டுச் சேர்க்கின்றார்களில்லை. இன்னும், நன்கொடைப் பொருள் கொடுக்குந் தலைமை, உலக நன்மைக்காக ஏற் பட்ட பாராளுமன்றத்தாரிடம் இல்லாததால் தமக்கு அது வேண்டாமென்று மறுத்துவிட்டார். ஒருகால், இவர் 'எனக்கு மிகுந்த வறுமை வந்தாலும், பிறரிடம் ஏற்றாயினுங் காலங்கழிப்பேன்' என்று கூறிவிட்டார்.

அரசியலாரிடமிருந்து பட்டம் பெறுதல், நன் கொடை பெறல், ஆகிய இவைகளெல்லாம் எவர்க்கும் எளிதில் கிடைப்பவை அல்ல. இவைகள் கிடைப்ப தற்காக மக்கள் தம் பொருளைக் கணக்கில்லாமற் செல வழித்து அல்லும் பகலும் உழைக்கின்றனர். அரசிய லாரே வலிந்து ஒருவருக்கு நன்கொடை கொடுப்பதை எவரேனும் வேண்டாமென்று மறுப்பரா? அப்படி மறுத்தவரைப்பற்றி இதுகாறுங் கேட்டதில்லை.

அம்மையார் தம்மிடத்துள்ள பணச்செழிப்பினால், அவ்வாறு சொன்னாரா? இல்லை. துன்புறும் ஏழை எளியவர்களி னிலையை அரசியலார் நன்கு உன்னியா திருப்பதால், தாம் அந்நன்கொடையை வேண்டாம் என் றார். வறுமைக் காலத்திலும் தந்நலத்தை வெறுத்துக் கூறிய மார்த்திநோ அம்மையாரின் பணப்பற்றில்லாத துறவுள்ளத்தின் பெருமையை என்னென்பேன்? ஏழை களை ஏறிட்டும் பாராமற் கடன்வாங்கியாயினும் பகட் டான ஆடை அணிகலன்களணிந்து வீண் பெருமை பேசிக்கொண்டு வறிதே காலங்கழிக்கும் நம் பெண் களின் நிலை, எப்போது முன்னேறப் போகிறதோ? அறி யேன்!

அம்மையார் தம் உறவினரிடமிருந்து சிறிது உதவி பெற்றார்; வறுமையுற்றிருந்த காலத்திலும், சில நேரங்களில் தையல் பூவேலைகள் செய்து பொருள் தேடுவர். அதனையும் பெரும்பாலும் தமக்கென வைத்துக் கொள்ளாது அறக்காரியங்கட்குச் செலவு செய்தார்.

## 10. நண்பர்கள் அம்மையார்க்குப் பொருள் தொகுத்தல்

1841–ஆம் ஆண்டில் இவர், 'வீட்டிற் குடி புகுவோர்,' 'அரசன் மகனுங் குடியானவனும்', 'இலண்டன் நகரத்தின் சிறுவர்க்கான சிறுகதைகள்' என்னும் புத்தகங்கள் எழுதினார். இக்கதைகள் இனிய சொற்கள் நிரம்பப் பெற்றனவாய்ப் பிள்ளைகள் மகிழ்ந்து பயில்வதற்கு ஏற்றனவாயிருந்தன!

1843–ஆம் ஆண்டில், அம்மையார், அரசியலாரின் நன்கொடையை மறுத்தமையும், அவர்தம் வறுமை வாழ்க்கையினையுங் கண்ட அவர்தம் நண்பர்கள் அவர்க்குப் பொருள்சேர்த்துக் கொடுக்கவேண்டுமென்று கருதினார்கள். கருதியபடியே, அவர்கள் இருபத்தோராயிரம் ரூபா சேர்த்தனர். சேர்த்த பணத்தை அவர் பேரால் ஓரிடத்தில் வட்டிக்குக் கொடுத்து வைத்தார்கள். அம்மையார் வேண்டும் செலவிற்கு மட்டும் பொருள் கொடுத்து வரலானார்கள். அம்மையார் எழுதிய ஏராளமான புத்தகங்களால் பொருள் கிடைத்திருக்க அவருக்குப் பொருள் முட்டுப்பாடு வருவதேன்? என்று கேட்கலாம். ஆனால், பொருள் எவ்வளவு வந்தாலும் அம்மையார் அதனை ஏழை எளியவர்களுக்கு அறமாகக் கொடுத்துவிடுவர். இவர் தமக்கென ஏதும் வைத்துக் கொள்வதில்லை. இஃதை அறிந்தே நண்பர்கள் தாம் தொகுத்த பொருளை, அவர் கையிற் கொடாமல் வேறே

ரிடத்தில் வட்டிக்குக் கொடுத்து வைத்து, அவர் வேண்டும்போது அதனை அவர்க்கு உதவி வந்தனர்!

## 11. அம்மையார் நோய்வாய்ப்படல்

மார்த்தினோ பெருமாட்டியார், மறுபடியும் 1843-ஆம் ஆண்டில், மிகவும் நோய்வாய்ப்பட்டார். அப்போது, கிரிமியா சண்டையில் போர் மறவர்களுக்குப் பேருதவி செய்துவந்த, பிளாரன்ஸ் நைட்டிங்கேல் என்னும் பெருமாட்டியார் அம்மையாரிடத்து மிகுந்த பற்றுடையவர். ஆகலான் நோயால் வருந்திப் படுக்கையிலிருந்த அம்மையாருக்கு அவர், அருகே வந்திருந்து நல்ல மருந்துகள் கொடுத்து, அவருக்கு வேண்டும் மற்ற உதவிகளையும் மிகவும் அன்போடு, செய்து வரலாயினர். பிளாரன்ஸ் பெருமாட்டியார் மிகக் கருத்தாகப் பார்த்ததன் பயனாக மார்த்தினோ அம்மையார், தமக்கு முன் பலகாலமாயிருந்த கொடியநோயினின்றும் விடுபட்டார்.

## 12. அம்மையார் வீடுகட்டுதல்

பெருமாட்டியார், தம் நாற்பதாம் ஆண்டில், தமக்கென இசைவான ஓர் இல்லம் வேண்டுமென நினைத்தார். இங்கிலாந்தில், ஏரிகள் நிறைந்த செழிப்பான ஊர் ஒன்றில், ஓரழகிய இடம் வாங்கினார். வாங்கி இவர் தம்மிடமிருந்த சில பொருள்களை ஈடாக வைத்துத் தம் பணக்கார மைத்துனர் ஒருவரிடமிருந்து சிறிது பொருள் வாங்கித் தம் மனதிற் குவந்தபடி, மிக நேர்த்தியான வீடு அமைத்துக் கொண்டார்! வீட்டைச்சூழ அழகிய பூஞ்செடிகள் வைத்தார். அம்மையார் மனம்போல், வீடுந் தோட்டமும் மிகக் குளிர்ச்சியா யமைந்தன! அவர், இப்புதுவீட்டிற்குக் குடிபோவதற்கு முன்னே அவர்

தம் நண்பர் சிலரோடு எகிப்துக்கும், பலஸ்தீனுவிற்கும் போய் எட்டுத் திங்களிருந்தார். பின்னர், இங்கிலாந்திற்குத் திரும்பிவந்து அப்புதுவீட்டிற் குடிபுகுந்தார். இவ்வீட்டிற்கு வந்தபின்னர் இவர் தம் நாட்களைக் கழித்த முறை பின் வருமாறாகும்.

நன்றாக விடிவதற்கு முன்னே எழுந்திருந்து, சில கல் தொலைவரை நடந்துவிட்டு, ஏழரைமணிக்கு வீடு வந்து சேர்ந்து காலை உணவு உட்கொள்வார். பின், எட்டரை மணியிலிருந்து இரண்டு மணிவரை எழுந்து வேலை செய்வர். பிறகு வருவோருடன் அன்பாகப் பேசுவார். குளிர்காலமாயிருந்தால், சில வேளைகளில், ஆட்டு மயிராற் கம்பளங்கள் பின்னுவார். அப்பொழுது, அவர் மனம் எழுதும் பொருள்களைப் பற்றிச் சென்று விடும். அந்நேரத்தில் தாம் செய்வதே இன்னதென்று நினைவில்லாமல் அக்கம்பளத்தை அளவுக்கு மிஞ்சி நீளமாகப் பின்னிக்கொண்டே யிருப்பாராம். இவர் தம் ஏவலாளர்கள் இவரிடம் மிக அன்பாயிருப்பர். இவர்கட்கு மணமானுல், அல்லது வேறிடம் போதல் நேர்ந்தால் தான் அவ்வேவலாளர்கள் அம்மையாரை விட்டுப் போவர்.

## 13. அம்மையார் விரிவுரைகள் செய்தலும் எளியவர்கட்கு இடம் அமைத்துக் கொடுத்தலும்

சில ஆண்டுகள் வரை, அம்மையார் தம்வீட்டின் பின் பக்கத்திலிருந்த பள்ளிக்கூடத்தில், அவ்வூரிலுள்ள வேலைக்காரர்களுக்கும் வாணிகஞ் செய்வோருக்கும் அருமையான பொருள் பற்றிப் பல சொற்பொழிவுகள் நிகழ்த்தினுர். அவைகளிற் சில மருத்துவ முறைகளைப் பற்றியவை; சில அவர் பயணமாகப் போயிருந்த இடங்

களைப்பற்றியவை; சில இங்கிலாந்தின் வரலாறுகளைப் பற்றியவை; சில வட அமெரிக்காவைப் பற்றியவையா கும். 1854ஆம் ஆண்டு அவர் கடைசியாகச் செய்த விரி வுரைகள், கிரிமியா சண்டையையும், அச்சண்டையில் ருஷிய அரசியலாரின் நடை முறைகளையும் பற்றியவை யேயாகும். அம்மையாரின் விரிவுரைகளைக் கேட்டுக் கொண்டிருந்த பெரியோர் சிலர், "மார்த்திஞே அம்மை யார் பேசும்போது, அவற்றின் பொருள் குழந்தைகளுக் கும் எளிதில் விளங்கும். இடையில் நிறுத்தாமல் பேசு வார். அவை கேட்க மிகவும் இனிமையாயிருக்கும். எத் தனை முறை கேட்டாலும் விருப்பமே மிகும்" என் ருர்கள். அவர் செய்த சொற்பொழிவுகள் ஒன்றேனும் வீண் போகவில்லை. அம்மையார் அங்குள்ள தொழிலா ளர்களுக்காக ஏழாயிரத்து ஐந்நூறு ரூபா கடன்பட்டு ஒரு நிலத்தை வாங்கி அதைப் பல பகுதிகளாக்கி, அவைகளில், அவர்கள் வீடு கட்டும்படி செய்து, அவர் கட்குவேண்டும் இன்னும் பல நன்மைகளுஞ் செய்து கொடுத்தார். இதுவுமல்லாமல், அவ்வூரிலுள்ள சிறுவர் சிறுமிகளுக்குத் தம்மிடமுள்ள கதைப் புத்தகங்களைக் கொடுத்துப் படிக்குமாறு செய்தார்.

## 14. அம்மையார் பயிர்த்தொழிற் பயிற்சி

மார்த்திஞே அம்மையார், எழுத்து வேலையைச் சின்னுள்நிறுத்தித் தம் நிலத்தில் தாமே பயிர்த்தொழில் செய்யத் துவங்கிஞர். துவங்கித் தக்க பயிர்த்தொழிலா ளர்களைக் கொண்டு நிலத்தைச் செவ்வைப்பட உழுது, பயன்தரத்தக்க வகையில் அதற்கு ஏற்ற உரங்களிட் டுப் பயிரிட்டார். 'பண்ணிய பயிரிற் புண்ணியந் தெரி யும்' என்று ஔவைப் பெருமாட்டியார் மொழிந்தபடி,

அம்மையார் அதுகாறும் செய்து வந்த புண்ணியங்களின் பயனாக அவர் செய்த பயிர்கள் மிகச் செழிப்பாய் வளர்ந்தன! இவர் செய்யும் பயிர்த் தொழிலின் நுட்பத்தையும், செழுமையையுங் கண்ட பெரியோர்கள் பலர், வேண்டிக்கொண்டதற் கிணங்கி, அம்மையார் 'உடல்நலம்' என்னுந் தலைப்புள்ள சில புத்தகங்கள் எழுதினார். அம்மையார், அப்புது வீட்டிற்கு வந்து பத்தாண்டுகள் வரை ஆண்டவனருளால் நோயின்றி நலத்தோடிருந்தமையால், மறுபடியும் பல புத்தகங்களோடு 'கீழ்நாட்டின் உயிர் வாழ்க்கை," 'இறந்த காலமும் நிகழ்காலமும்' 'குடித்தன முறை' என்பனவற்றை எழுதினார். 'அமெரிக்காவின் முப்பதாண்டின் வரலாறு' என்னும் புத்தகம் மிகச் சிறந்த தொன்றாகும். 'குடித்தன வாழ்க்கை' என்னும் இதழில் மக்கள் நலத்தோடு வாழும் முறைகளைக் கற்பிக்கும் கதைகளை நன்றாய் எழுதினார்.

1852-ஆம் ஆண்டில், 'நாட் செய்தித் தாள்களுக்குப் பல பொருள்கள் எழுதவேண்டுமென்று அம்மையாரைப் பலர் வேண்டிக் கேட்டுக்கொண்டனர். அவர் தம் வாழ்நாள் முடிவதற்குள் ஆயிரத்து அறுநூற்று நாற்பத்திரண்டு பொருள்கள் எழுதினார். இன்னும் மற்றுமுள்ள இதழ்கட்கும் பலபொருள்கள்பற்றி எழுதி அனுப்பினார்.

1854-ஆம் ஆண்டு மறுபடியும் அம்மையார், உடல் நலங் கெட்டார். இவர் இலண்டனுக்குச் சென்று தம் நோய் எத்தன்மையது என்று பெரிய மருத்துவர்களைக் கேட்டார். அதற்கவர்கள், நன்றாய் ஆராய்ந்து பார்த்து "அந்நோய் செந்நீர் கெட்டுப் போனதால் உண்டானது; இதற்கு ஏதொரு பரிகாரமுஞ் செய்தல் இயலாது

ஆகலான், அம்மையார் மேலுலகஞ் செல்லுங் காலத்தை எதிர்பார்த்தல் வேண்டு" மென்றனர். இக்காலமுதல், அடிக்கடி இழுப்பு நோய்வந்து அம்மையார் உணர்வில் லாமற் கிடப்பார்; இரவிற் படுக்கையில் மூச்சுவிட முடியாமல் தவிப்பர். இவ்வாறெல்லாங் கடுந்துன் பத்தை அடைவதைவிட உயிர் போய்விடுதல் நலமென் றெண்ணி அவர் வருந்தினர்! ஆனால், அம்மையாரது புனிதமான உயிரினிடத்துக் கூற்றுவன் வர அஞ்சி னன். இத்துன்பத்திலும், பெருமாட்டியார் பல நூல் கள் எழுதட்டு மென்று அவன் வாளா இருந்தனன் போலும்! இவ்வாறு பல ஆண்டுகள் இக்கடு நோயால் துன்புற்றார்: நோய் சிறிது நீங்கினாலும் உடனே எழுத்து வேலை செய்வார். இந்நிலையிலும், ஏழை எளியவர்கட்கு உதவி செய்வார். அம்மையார் நலமில்லாதிருப்பதை அறிந்த நண்பர் பலர் அவருக்கென அனுப்பிய சிறந்த பண்டங்களை எளியார்கட்குக் கொடாமல் உண்ணார்.

1859-ஆம் ஆண்டில், 'இங்கிலாந்தும் அந்நாட்டுப் போர்மறவர்களும்' என்னும் பெரிய புத்தகம் எழுதி னார். இவர் தம் அருமை நண்பராகிய பிளாரன்ஸ் நைட்டிங்கேல் அம்மையார் போர் மறவர்களின் நலத் திற்காகச் செய்து வந்த அரும்பணிக்கு உதவியாக அப் புத்தகத்தை எழுதினார். உடல் நலமற்ற அம்மையார் இவ்வளவு புத்தகங்களு மெழுதி மக்களுக்கு அளப் பிலாப் பெரு நன்மைகளைச்செய்தது பெருவியப்பினையே தருகின்ற தன்றோ! அம்மையார், ஆண்டவ னருளாலும், தம் மன வன்மையினாலு மன்றோ இத்தனையுஞ் செய்தார்.

1861–ஆம் ஆண்டில், அம்மையார் பல நாடுகளின் வரலாறுகளை எழுதத் துவங்கினார். இவர் தாம் நெய்த கம்பளங்களை விற்றுப் பல அறங்களைச் செய்தார். இவர் தமக்கு உடல் நலமில்லாதிருந்த காலங்களில் அவரெழுதின புத்தகங்களின் பெயர்களை மட்டும் எழுதுவதென்றால் எத்தனையோ பக்கங்கள் வேண்டுமென்றோர் ஓரறிஞர்.

## 15. அம்மையாரின் முடிவு

அம்மையாருக்குக் குழந்தைகளிடத்தில் மிகுந்த விருப்பம். இவர் தம் கடைசிக் காலத்திலும் அவர்களைக் கண்டு பெரு மகிழ்வடைவர். 1876–ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 27–ஆம் நாள் மார்த்தினோ அம்மையார் தங் கடுமையான நோய்த் துன்பத்தினின்றும் விலகப்பெற்று ஆண்டவனோடு அழிவிலாப் பேரின்பத்தை அடையுமாறு இவ்வுலக வாழ்வை நீத்தார் !

மார்த்தினோ பெருமாட்டியார் தம் இளமைக்காலத்தில் தங்கணவனை யிழந்து கைம்பெண்ணாகி யிருந்தும், அவர் ஒருநாளாயினும், ஓரிமைப்பொழுதாயினும் வீண்காலம் போக்காமல், எண்ணுக்கடங்காத அரிய பெரிய நூல்களெழுதினார். இவர் தம் நலமில்லா உடலோடு மக்களின் பொது நன்மைக்காகத் தம் வாழ்நாள் முழுதும் ஒழுங்கான வழியில் நடந்து அழியாப் பெரும் புகழெய்தினார். அம்மையார் வரலாற்றைப் படிக்கும் நம் தென்றமிழ் நாட்டுப் பெண் மக்கள் அவர் போலக் கல்வியிலும், ஒழுக்கத்திலுஞ் சிறந்து மக்களுக்குப் பெரு நன்மைகள் செய்வார்களாக !